# குமரன்

மலர் 26 | காந்தி ஆண்டு 80 ஆனி, ஆடி 1949 ஜூன், ஜூலை | இதழ் 10, 11



உண்மை ஓங்குக! அறம் தழைக்க!

4 அணா

## குமரன் (மாதப்பதிப்பு)

| | | | | |
|---|---|---|---|---|
| ஆண்டுக்கட்டணம் | ரூ. | 3 | 0 | 0 |
| டி வெளிநாடுகட்கு | ,, | 4 | 0 | 0 |
| தனிப்பிரதி | ,, | 0 | 4 | 0 |

மானேஜர்,
**குமரன் ஆபீஸ்,**
அமராவதி புதூர்,
இராமநாதபுரம் ஜில்லா.

# குமரன்

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

ஆசிரியர்: **சொ. முருகப்பா.**


| மலர் 26 | காந்தி ஆண்டு 80 ஆனி, ஆடி<br>1949 ஜூன், ஜூலை | இதழ் 10<br>11 |
|---|---|---|


## உள்ளுறை

Blank page counted.

# குறிப்புக்கள்.

**"பெரியார்"**

ஈரோட்டில் பெரிய குடும்பத்தில் பிறந்து பெரும் செல்வாக்குப் பெற்று காங்கிரஸ் தொண்டில் தன்னை மறந்து ஈடுபட்டுழைத்து மேன்மை பெற்ற தியாகி ஈ. வே. ராமசாமி நாயக்கர். காலக்கிரமத்தில் காங்கிரஸிலுள்ளவரிற் சிலர் தியாக நிலையமான காங்கிரஸுக்குள் இருந்தே ஜாதிப்பற்றுக்கொண்டிருப்பதையும், காங்கிரஸ் செல்வாக்கை தன் ஜாதி நலனுக்குப் பயன்படுத்தி வருவதையும் அவ்வளவி லன்றி பிற ஜாதியினரின் தியாகங்களையும் மறந்து தீங்கு செய்வதையும் உணர்ந்தார். காங்கிரசைவிட்டு விலகினார். பிராமண சமூகத்தவர் சிலரின் கெட்டதனமான ஜாதிப்பற்றைக்கண்டு சீறினார். அதை ஒழிப்பேனென வெறிகொண்டார். ஜனங்களின் ஆதரவுங் கிடைத்தது. ஜாதியொழிப்பு புரோகித ஒழிப்பு, சமூகசீர்திருத்தம், பழங்கொள்கை எதிர்ப்பு போன்றவைகளில் ஈடுபாடுடைய பலருக்கு வேறு சார்பு தமிழகத்தில் இல்லையாதலால் அவர்களும் இதில் சேர்ந்தனர். ஆனால் வரவர நாயக்கரின் போக்கு துவேஷத்திலேயே சென்று அழிவு வேலையைப் பற்றி இயங்கியதே தவிர ஆக்க வேலைக்கு இடமளிப்பதாக இல்லை. ஒரு துவேஷப் பிரசாரத்தில் மக்கள் சலிப்படையும்போது மற்றொரு துவேஷப் பிரசாரத்தைக் கிளப்பினார். பிராமண ஜாதி, காங்கிரஸ், பணக்காரர், கோயில், கடவுள், சாத்திரங்கள், தமிழிலக்கியங்கள் என்று ஒன்றன்பின் ஒன்றாக துவேஷப் பிரசாரத்தை யெழுப்பிவிட்டார். தப்பிதம் உள்ள இடங்களைப்பற்றிக் கிளறி எதிர்த்துப் பிரசாரம் செய்வதிலிருந்து மக்கட்கு நியாய அறிவு தோன்றுவது இயற்கை. ஒரு ஏரியை உடைக்கும்போது தண்ணீரை மற்றொரு ஏரியில் நிரப்பிக்கொள்ள வேண்டும்; ஒரு வயலை அழிப்பதானால் மற்றொரு வயல் தயாராக வேண்டும் என்ற தத்துவம் நாயக்கரின் ஞாபகத்துக்கு வருவதில்லை. பாமர மக்களுடைய மனோதத்துவத்தை அவர் மிகத் தெளிவாக அறிந்தபடியால்தான் இவ்வளவு காலம் ஒப்பேறிவந்தார். யாரும் அவரையெதிர்த்து வீழ்த்த முடியாமற் போனதற்கு அதுவே காரணமாகும். தமிழ்நாட்டை ஒரு சாக்கடைக்குழியாக்கி வரும் ஜாதிவேற்றுமை, சடங்கு, சாத்திரங்கள் ஆகியவற்றை ஒழிப்பதில் ஆர்வமுள்ள, அறிவுள்ள இளைஞர் யாவர்க்கும் வேறுபுகலிடமில்லாமற் போனதால் நாயக்கரைத் தொடரவேண்டியதாயிற்று. எனவே அவர் 'பெரியார்' என்று அழைக்கப்பட்டார்.

துவேஷத்திலும் அவநம்பிக்கையிலுமே அவருடைய மறுபிறப்பு ஆரம்பமாகியது. காங்கிரஸிலிருக்கும் போது பிறரிடம் கொண்டிருந்த நம்பிக்கை மிகப் பெரிது. உயிருக்குயிரான நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களும், தியாகமூர்த்திகளென்று நம்பப்பட்டவர்களும் ஜாதிப்பித்தில் திரும்பிவிட்டார்களென்றதை யறிய மனமொடிந்து போனார் நாயக்கர். பிறகு எவரையும் அவரால் நம்ப முடியவில்லை. உலகமக்கள் எல்லாருமே சமயத்தில் புரட்டர்தான்; தியாகமெல்லாம் வேஷந்தான்; சுயநலந்தான் மனித இயல்பு,' என்ற தீர்க்கமான முடிவுக்கு அவர் வந்துவிட்டார். இதை அடிப்படையாக வைத்து அவருடைய இயக்கத்திலுள்ள எவரையும் தலைதூக்க விடாமல் அடித்து வந்தார். ஒரு நீர் மட்டம்! அதற்கு மேல் எவருடைய தலையும் மேலே தெரியமுடியாது. ஆகையால் தான் அவர் ஏக தலைவராக இருக்க முடிந்தது. இதனால் தான் மற்ற இயக்கங்களில் ஏற்பட்டிருப்பதைப்போல் இந்த இயக்கத்தில் நாயக்கரையடுத்துப் பல தலைவர்கள் தோன்ற முடியவில்லை. நாயக்கருக்கு ஒழுங்கான வேலைத்திட்டமுறை ஒத்துவருவதில்லை. இன்னது தான்எங்கள் கொள்கை என்று அவர்கூறி அதைச் சாதிக்க வழிவகைகளை வகுத்ததில்லை. ஒரு பெண்ணைத் தான்ஒருவன் கல்யாணம்செய்து கொள்ளலாம் என்று தொண்டர்கள் பெரியார் தலைமையில் நெருப்புப் பறக்கப் பேசுவார்கள். அடுத்த நாள் பெரியார் தலைமையில் ஒரே மணையில் இரண்டு பெண்ணையும் ஒரு மாப்பிள்ளையையும் வைத்துத் தாலிகட்டிச் செய்தி வெளிவரும். இப்படி நாயக்கருக்கு எதிர்ப்பு வேகமே பெருகியிருந்ததன்றி ஆக்க வேலைச் சிந்தனை யேற்படவில்லை யென்பது என்றுந் தெரிந்தது தான். அவரைப் பின்பற்றியவர்களில் பலர் வெளியே போனார்கள். பலர் பொறுத்துக்கொண்டு உடனிருந்து வந்தார்கள். மதம், அரசியல், சமூகம், பொருளாதாரம் எல்லாவற்றையும் எதிர்த்ததால் ஆக்க வேலைத் திட்டம் போட முடியாமற் போனதும் ஒரு காரணமாகும்.

நாயக்கர் கல்யாணம் செய்துகொள்கிறார் என்றதும் ஜனங்கள் அதை ஒரு விகடமாகவே கருதினர். நாயக்கருக்கு வயது 72. இந்த வயதில் கல்யாணம் செய்துகொள்ளலாமா கூடாதா என்பதுபற்றிய இருகட்சிவாதலை குறைவற நடந்திருக்கிறது. பெண் சம்மதித்தால், மணமகனுக்குப் பெண்ணையாளும் சக்தி 72 வயதானாலும் குறையாதிருந்தால் இருவரும் கல்யாணம் செய்துகொள்ளலாம் என்ற வாதத்தை யெடுத்துப் பேச இப்பொழுதும் ஆட்கள் சீர்திருத்தக்கட்சியில் இருப்பதறிய வருந்துகிறோம். 30 கோடி ஜனங்கட்கு அதிகமாக நமது நாட்டில் இருக்கிறார்கள். அவர்களில் பலர் பலமாதிரியான கல்யாணங்களைச் செய்துகொள்கிறார்கள். அவற்றுள் அனேகம் சீர்திருத்தக்காரர்களுக்கு எட்டுவதில்லை. தெரிகிறபொழுது கண்டித்து வருகிறார்கள். சாதாரணமான ஒரு மனிதன் நடத்தையால் சம்பந்தப்பட்ட இரண்டொருவருக்குத்தான் சாதகபாதக மேற்படுகிறது. ஆனால் பெயர் விளம்பரப்படுத்தப்பட்ட தலைவர்கள் விஷயம் அப்படி எளிதில் போகிறதில்லை. அதிலும் சமூகப்புரட்சி வீரர்கள் புறமுதுகிடும்போது நிலைமை தலைகீழாகிப் போர்க்களமே அமளிப்பட்டு அரசழிந்து போய்விடும். இந்த உண்மை நாயக்கருக்குத் தெரியாதென்று சொல்லமுடியாது. சுயநயம் இதை மறைத்துவிட்டதென்று சொல்வது, சென்ற 40 ஆண்டுகட்கு அதிகமாகப் பொதுவேலையையே கொண்டு வாழ்ந்த அவரை கௌரவப்படுத்துவதாகாது. என்றாலும் நிலைமை அப்படித்தானாகிவிட்டது. தன் சொத்துக்கு வார்சு வேண்டுமென்பது மகா மட்டமான அபிப்பிராயமாகும் என்ன சொத்து? எவ்வளவு சொத்து? எதற்காகச் சொத்து? மனிதன் ஏற்படுத்துகிற வார்சு எத்தனை நாளைக்கு நிலைக்கமுடியும்? சேர சோழ பாண்டியர், நாயக்கர்கள் முஸ்லிம் மன்னர்களெல்லாரும் அளவற்ற சொத்தும் அதற்கு வார்சும் உண்டாக்கினார்கள்! எத்தனை நாள் நின்றது? நாயக்கருக்கு மணியம்மை வார்சு. மணியம்மைக்குப்பிறகு அவருக்குப் பிறக்கும் பிள்ளை வார்சு, அப்பால் பிள்ளையின் பிள்ளை! வருந்துகிறோம்; மிகவும் வருந்துகிறோம். தன் கட்சியானாலும், எதிர்க் கட்சியானாலும், நல்ல இயக்கமானாலும், கெட்ட இயக்கமானாலும் பொது ஜன இயக்கத்தலைவர் ஒருவர்—நாற்பதாண்டு இயக்கத்தில் தலைமைவகித்த ஒருவர்—இந்நிலையை அடைவது பொது இயக்கத் தலைமைப்பதவிக்கே ஏற்பட்ட ஒரு பலத்த அடியாகும்! இயக்கங்களைப் பின்பற்றும் பொது மக்களின் நம்பிக்கையில் வீழ்ந்த பேரிடியுமாகும்! இந்தமாதிரிச் செயல்களாலேயே பெரியார் சிறியாராக நேர்கிறது. "குன்றின் அனையாரும் குன்றுவர்; குன்றுவ குன்றி அனைய செயின்" இது நாயக்கர் புதிதாக நம்பிப் படிக்கத்துவங்கிய அறநூலிலுள்ள ஒரு குறள்! சுத்தமான பச்சிளம் பாலுள்ளமுடையவர்கள்—உலகிலுள்ள பொய் புரட்டு அநீதி துயரம் ஆகியவற்றைக்கண்டு சகிக்கமுடியாத இரக்கம் படைத்தவர் பலர் இவ்வியக்கத்தில் உள்ளனர். இந்த இளைஞர்கள் எதிர்பாராத இந்த விபரீதத்தைக்கண்டு வெதும்பித் துன்புற்றுத் திகைக்கின்றனர். இந்நிலையில் நாயக்கர் சொந்த விஷயத்திற்குத் திரும்பிச் செல்கின்றார். பொது வாழ்விற் புறமுதுகு காட்டித் தனிவாழ்வு வாழப்போகும் அவர் வார்சு பெருக்கி வழிவழி வாழ்வாராக.

# சந்திர நாகூர்

T. S. S.

சமீபத்தில் (19-6-49) நடைபெற்ற பொதுஜன வாக்கெடுப்பில், 260 வருஷங்களாகப் பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் அடங்கிக்கிடந்த சந்திர நாகூர், இந்திய யூனியனுடன் சேருவதென அம்மக்கள் தமது விருப்பத்தை அறிவித்துவிட்டனர். வாக்கெடுப்பு மிக அமைதியாகவும் குற்றங்குறைபாடுகளின்றியும் நடந்தேறியதென மத்தியஸ்தர்களே கூறியுள்ளனர். வாக்காளர் ஜாபிதாவில் உள்ள 12194 பேர்களில் 7608 பேர் தம் வாக்குகளை அளித்துள்ளனர். எனவே, மொத்தம் வாக்காளரில் 60 சதவிகிதத்துக்கும் மேலாக வாக்களித்துள்ளனர். செல்லுபடியாகாத வாக்குகள் 21 நீங்கலாக, பிரெஞ்சு யூனியனில் இருப்பதென 114 பேர்களும், இந்திய யூனியனுடன் இணைப்புக்காக 7473 பேர்களும் வாக்குகளைப் பதிவு செய்துள்ளனர்.

சுதந்தர இந்தியா இந்த இரண்டு ஆண்டுகளுக்குள் சாதித்த பெருங்காரியங்களுள் முன்னணியில் நிற்பது சமஸ்தானங்களின் இணைப்புப் பிரச்னையே. அப்பிரச்னையும், திருவாங்கூர்-கொச்சி இணைப்புடன் முடிவுற்றதென்றே கருதலாம். அடுத்தபடியாக இந்திய யூனியனின் ஐக்கிய பத்தியத்துக்கு அந்நியநாட்டுத் துண்டுப் பிரதேசங்களின் பிரச்னை முக்கியமானதாக உள்ளது. கணிசமான இடங்கள் பிரெஞ்சுக்காரரின் கீழ் இருக்கின்றன. மிகச் சிறு பிரதேசம் போர்த்துகீசியர்களின் ஆட்சியிலுள்ளது. வடநாட்டில், வங்காளத்தில் சந்திரநாகூர்தான் பிரெஞ்சுப் பிரதேசம். எனவே இன்றைய பொது வாக்கெடுப்பின் முடிவு இப் பிரச்னையின் இறுதி வெற்றிக்கே அறிகுறியாக விளங்குகிறது எனலாம்.

17-ம் நூற்றாண்டில், கற்கண்டுக்கட்டியை எறும்புகள் மொய்ப்பதுபோல், வங்காளத்தில் வியாபார நிமித்தம் ஏழு ஐரோப்பிய நாட்டார் வந்து நுழைந்தனர். அவர்கள்-போர்ச்சுகல், பிரான்ஸ், டென்மார்க், பிளாண்டர்ஸ், இங்கிலாந்து, பிரஷியா, ஹாலந்து நாட்டு வியாபாரிகளேயாவர். சில காலத்துக்குப் பின், ஆங்கிலேயரையும் பிரெஞ்சுக்காரரையும் தவிர மற்றையோர் வங்காளத்தை விட்டுச் சென்றனர்.

சந்திரநாகூர் கல்கத்தாவில் இருந்து 21 மைல் தூரத்தில் ஹுக்ளி நதியின் மேல்கரையில் உள்ள சிறு பிரெஞ்சுக் குடியேற்றம். 'சந்திரநாகூர்' என்றால் சந்திரன்-நகர் என்றும், சந்தண நகர் என்றும் பொருள் கொள்ளலாம். முதன் முதலாக டச்சுக்காரர் இங்கு தங்கியிருந்தனர். ஒரு நாள், சோழமண்டலக் கரைக்குச் சென்று கொண்டிருந்த பிரெஞ்சுக் கப்பல்களுள் ஒன்று வழிதவறி, ஹுக்ளி நதி முகத்துவாரத்துள் நுழைந்து தங்கியது. அதை டச்சுக்காரர்கள் கைப்பற்றினர். பின்னர் பிரெஞ்சுக் கப்பல் என அறிந்து அதை விடுவித்து, அத்துடன் அவர்களுக்கும் வங்காளத்தில் எங்கும் வியாபாரம் நடத்தவும் பண்டகசாலை கட்டிக்கொள்ளவும் இடமளித்தனர். இந்தச் சம்பவம் நிகழ்ந்தது 1674-ல். எதிர்பாராத இச் சம்பவமே சந்திரநாகூரில் பிரெஞ்சுக்காரர் தோன்றக் காரணமாயிற்று.

1674 முதல் 1688 வரை இவர்களைப்பற்றி ஒன்றும் விவரமாகத் தெரியவில்லை. ஆனால் (இன்று கீழ் பாகிஸ்தானத்திலிருக்கும்) காஸிம் பஜார் என்ற ஊரில் பிரஞ்சுக்காரர் தமது முக்கிய பண்டகசாலையை அமைத்திருந்தனர் என்று மட்டும் தெரிகிறது. 1688-ல் தான் சந்திரநாகூரின் சரித்திர பூர்வமான தோற்றம் ஆரம்பமாகியது. அவ்வருஷம், மொகலாய சக்கரவர்த்தியின் ஔரங்கசீப் சந்திரநாகூரில் ஒரு பெரிய பண்டகசாலையைக் கட்டிக்கொள்ள பிரெஞ்சுக்காரருக்கு அனுமதியளித்தார். பின்னர், 1696-97-ல் சுபாசிங் கலகம் நடந்த காலத்தில் தங்கள் தற்பாதுகாப்புக்காக கோட்டை கட்டிக்கொள்ள அனுமதியும் பெற்றனர். அக்கோட்டைக்கு "ஸெண்ட் ஆர்லீன்ஸ்" என்று பெயரிட்டனர். கோட்டையைச் சுற்றி அகழ் ஒன்றும் தோண்டினர்.

அன்று முதல் இன்றுவரை 260 வருஷ காலத்தில் பல தடவைகள் சந்திரநாகூர் கை மாறியிருக்கிறது. ஆனால் அதிகமாக பிரெஞ்சுக்காரர்களே ஆண்டனர். டூப்ளேயின் 10 வருஷ ஆட்சியில்தான் அதன் செழிப்பு ஓங்கிவளர்ந்தது. 1701-ல் சந்திரநாகூர் புதுச்சேரி கவர்னரின் ஆதிக்கத்தில் விடப்பட்டது. அப்போது ஒரு சிலகுடும்பங்கள்தான் அங்கு இருந்தன. பிரான்சு மக்கள் அதிக சிரத்தை காட்டவில்லை; பணமும் அனுப்பி உதவவில்லை. எனவே அதன் அபிவிருத்திக்கு வழியில்லாதிருந்தது.

1731-ல் டூப்ளே சந்திரநாகூரின் அதிகாரியாக நியமிக்கப் பெற்றான். ஓய்ந்துபோய்க் கிடந்த அந்நகரை உற்சாக முறச்செய்வது அவன் பொறுப்பாயிற்று. தீவிரமாக வேலைசெய்து பத்து வருஷ காலத்தில் சந்திரநாகூரை அழகு வாய்ந்த நகரமாக்கினான். ஆரம்பத்தில் தனது சிறு சேமிப்பைச் செலவுசெய்து தன் வேலையை நடத்தினான். முன்னேற்றத்தைக்கண்ட பிரான்சு தேச மக்கள் தொடர்ந்து பணத்தை

அனுப்பிவைக்கலாயினர். வியாபாரத் தொடர்பை டூப்ளே விஸ்தரித்தான். ஜெட்டா, மோச்சா, பாஸ்ரா முதலிய மேற்றிசை ஊர்களுடனும் கிழக்கே சீனத்துடனும் வர்த்தகத் தொடர்பை ஏற்படுத்தினான். திபேத் நாட்டுடன்கூட வர்த்தகத் தொடர்புக்கு அடிகோலினான். 1741-ல் டூப்ளே புதுச்சேரிக்கு மாற்றிச் செல்லுகையில் சந்திரநாகூர் சிறு அழகுவாய்ந்த நகரமாய் விளங்கியது. அன்று முதல் நகரின் சிறப்பு மங்கத்தொடங்கியது என்றே கூறிவிடலாம்.

1756 முதல் பிரான்ஸும் இங்கிலாந்தும் உலகில் பல இடங்களிலும் சண்டையடித்துக்கொண்டன. எனவே சந்திரநாகூர் திருந்த இடமேயில்லாது போயிற்று. 1757-ல், யுத்த காலத்தில், ஆங்கில தளகர்த்தனான கிளைவ் பிரபு சந்திரநாகூரைத்தாக்கி கவர்னர் ரெனால்டை சரணடையச் சொன்னான்; அவர் மறுத்துவிடவே கிளைவ் ஊரைப் பொசுக்கி நிர்மூலமாக்கினான்; பெருவாரியாகச் சூறையிட்டான். நகரைச் சுற்றியிருந்த அகிழை மூடிவிட உத்திரவிட்டான். சூறையாடிய பொருள்களின் பெருமானம் 130,000 பவுன்; ஏராளமான துப்பாக்கிகளும் வெடிமருந்தும் கைப்பற்றப்பட்டன. நகரம் க்ஷீணிக்கத் தொடங்கியது. 1769-ல் வங்காள நவாப்பான சிராஜ்-உத்-தௌலா, பிரெஞ்சுக்காரர்கள் தங்கம், வெள்ளி இவற்றைத் தங்கள் ஊருக்கு ஏற்றுமதி செய்யக்கூடாதென உத்தரவிட்டான். அவர்கள் அதை அலட்சியம் செய்யவே, 12 வருஷங்களுக்குமுன் கிளைவ் செய்ததுபோலவே, தானும் நகரை நாசம் செய்தான்.

1778 முதல் 1783 வரை சந்திரநாகூர் ஆங்கிலேயர் வசம் இருந்தது. பிரான்சில் புரட்சி நடந்தகாலம் அது. சந்திரநாகூர் மக்களும் அந்த உணர்ச்சி மேலிட்டு, தப்பியோட முயன்ற தங்கள் கவர்னரையும் மன்னர் கட்சியைச் சேர்ந்த வேறு சிலரையும் சேர்த்து பிரான்சுக்குக் கப்பலேற்றி அனுப்ப ஏற்பாடு செய்தனர். தக்க சமயத்தில் ஆங்கிலேயரின் கவர்னர்ஜெனரலான கார்ன்வாலிஸ் பிரபு, அவர்களை விடுவித்துக் காப்பாற்றினார். 1793 முதல் 1816 வரை ஆங்கிலேயரே சந்திரநாகூரை ஆண்டனர். மத்தியில் சில மாதங்களே குழப்பமாயிருந்தது. 1816-ல் உடன்படிக்கைப்படி பிரெஞ்சுக்காரரிடம் திரும்பிய சந்திரநாகூர் அன்றுமுதல் அவர்களிடமே இருந்துவிட்டது.

கிளைவ் மூடச்செய்த கோட்டை அகிழ் பின்னர் தோண்டப்பெற்றது. இன்றைய நகர் நான்கு மைல் நீளமும் ஒரு மைல் அகலமுமுள்ள சிறு உள்நாட்டு நகரமேயாகும். டூப்ளே காலத்திலிருந்த பொலிவை நகர் மீண்டும் அடையவேயில்லை எனலாம்.

(தொடர்ச்சி 48-ம் பக்கம் பார்க்க)



# வருங்காலப் பிரச்னைகள் — 2

"தராசு"

காலக்கிரமத்தில் கவனிக்கப்பட வேண்டிய பிரச்னைகளில் முக்கியமானது, பெருகிக்கொண்டே போகும் ஜனத்தொகையைப் பற்றியதாகும். இந்தியாவின் விஸ்தீரணத்திற்குத் தக்கபடி ஜனத்தொகை அதிகமா? அல்லது குறைவா? என்ற வாதத்தை இங்கு கிளப்ப முடியாது. பொருளாதார சாஸ்திரத்தில் அதிக ஜனத்தொகை (Over Population) என்பதை "எந்த தேசமும் அதனுடைய மக்களை காப்பாற்றுவதற்குண்டான அடிப்படைத் தேவைகளை எந்தஅளவு பூர்த்தி செய்ய முடியுமோ அதைத்தன் ஜனத்தொகையின் கணிசமென்றும், அந்த எல்லைக்கு மீறிஇருந்தால் அப்பொது ஜனத்தொகை அதிகமென்றும் கூறப்பட்டிருக்கிறது. "இந்த நியாயவாதத்தை ஒட்டி, இந்தியாவின் நிலைமையை கூர்ந்து நோக்கும்போது, நம் தேசத்தில் காணப்படும் வறுமை, பசிப்பிணி, நோய், முதலியவற்றை சிந்தித்து பார்க்கும்போது ஒவ்வொரு பத்து வருஷத்திலும் நான்குகோடி வீதம் ஜனத்தொகையை பெருக்கிக்கொண்டே போகமுடியாதென்று நிச்சயமாகக்கூறலாம். இப்பொழுதுள்ளவர்களுக்கு உணவு, உடை, கல்வி, போன்ற அத்தியாவசியமான தேவைகளை அளிக்கக்கூடிய சக்தியை நம் தேசம் பெறும் வரையில் ஜனத்தொகைப் பெருக்கத்தை அவசியம் குறைக்கத்தான்வேண்டும். ஜனப்பெருக்கத்தைத் தடுப்பதற்கு விஞ்ஞான முறைகளை கையாளுவது சரியென்று வாதிக்கமுடியாது. பொது மக்களுக்கு இன்றுள்ள கஷ்டத்தை நன்கு எடுத்துரைத்து அவர்களாகவே இயற்கைமுறையை மேற்கொள்ளும்படி அரசாங்கம் உணர்த்தவேண்டும். காரியாம்சத்தில் இந்தமுறை அசாத்யமென்று வாதாடலாம். ஆனால் இந்தியாவின் சுபீட்சத்திற்காக இந்த திட்டத்தை பொதுமக்கள் அனுசரிக்கவேண்டும். இது கடினமான சோதனையாகும். இதில் வெற்றிபெற்றால் நம்முடைய ஆத்மீக சக்தியானது உலகத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாக அமைந்து விடக்கூடும். இதைத்தான் காந்திஜி பலதடவைகளில் எடுத்துரைத்திருக்கிறார். வருங்காலத்திட்டத்தில் ஜனத்தொகை பிரச்னைக்கு அடுத்தபடியாக இருப்பது வறுமையை எப்படி அகற்றுவதென்பதாகும். வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதும், ஜமீன்தாரி முறையை அகற்றுவதும், விவசாயிகளின் நிலைமையை உயர்த்து

வதும், கிராம மக்களுக்கு சுலபமான முறையில் கடன் கொடுத்தும், அதனைக்கொண்டு சிறு தொழில்களை அமைப்பதும் கூட்டுறவு இயக்கத்தை விஸ்தரிப்பதும், நிலத்திலிருந்து அதிகமான பொருளை உற்பத்தி செய்வதும், குடிசைத் தொழில்களை அமைப்பதும்தான் வறுமையை போக்கும் உண்மையான திட்டமாகும். இதில் அரசாங்கம் போதுமான கவனம் செலுத்த வேண்டும்.

பொருளாதார பிரச்னைகள் தீருவதற்கு விவசாய அபிவிருத்தி திட்டம் மாத்திரம் போதாது. அரசாங்கத்தின் கீழ் சரியானதொரு கைத்தொழில் திட்டம் வகுக்கப்படவேண்டும். நம் தேசத்தில் அன்னிய ஆதிக்கத்தினால் சீரழிந்துகிடக்கும் கைத்தொழில் திட்டத்தை அடியோடுமாற்றி புதியதொரு திட்டமேற்படுத்த வேண்டும். எந்தந்த தொழில்களை குடிசைத் தொழில்களாக்க முடியுமென்றும், எவற்றை பெருவாரியாக உற்பத்திசெய்யும் நவீன முறைகளின் கீழ் கொண்டுவர வேண்டுமென்பதில் ஒரு கமிஷன் நியமித்து, அதனுடைய முடிவை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளவேண்டும். தற்காலத்திலுள்ள கைத்தொழில் முறைகளை நாம் கண்டிக்க வேண்டியிருந்தாலும், நாம் மீண்டும் பழய காலத்திற்கே செல்ல முடியாதென்பதையும் உணரவேண்டும். நாம் விரும்பினாலும்கூட இனி பழய காலம் நம்மிடையே தோன்ற முடியாது. மாறிக்கொண்டுவரும் காலப்போக்கிற்கும் நாகரிகத்திற்கும் நாம் இடம் கொடுத்தாகவேண்டும், இதே சமயத்தில் நாகரிகத்தினால் தோன்றும் தீமைகளை எவ்வாறு அகற்றுவதென்பதையும் தீர்மானிக்கவேண்டும்.

இந்தியாவில் குடிசைத் தொழில்கள் விருத்தியாவதற்குப்போதுமான வசதிகள் இருக்கின்றன. விவசாயத் தொழிலாளர்களுக்கு, ஓய்வு நேரத்திலும் வருமானம் தரும்படியான நூல் நூற்றல், நெசவு போன்ற தொழில்களை விருத்திசெய்ய வேண்டும்; கிராம முன்னேற்றத்திற்கு இந்த திட்டங்கள் இன்றியமையாததாகும். புனரமைப்பு திட்டத்தை அமல்செய்ய ஏராளமான மூலதனம் வேண்டும். மூலதனம் திரட்ட அன்னிய தேசங்களில் சரியான திட்டமிட்டிருக்கிறார்கள். நம் தேசத்தில் மக்களின் வருமானம், தேசத்தின் வருமானம் ஆகியவற்றில் சரியான புள்ளி விபரங்கள்இல்லை யாதலால், பெரிய திட்டங்களை நிறைவேற்றுவதில் தடங்கலேற்படுகிறது. இந்த குறையைத்தீர்க்க சமீபத்தில் ஒரு கமிஷன் அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தகமிஷன் நம் தேசத்தின் தேசீய வருமானத்தை நிர்ணயம்செய்ய குறைந்தது மூன்று ஆண்டுகளாகும். அதன்பிறகுதான் புதிய திட்டங்களை கவனிக்க இயலும்.




இந்தவேலையை ஒரு ஆதாரமாகக்கொண்டு மூலதனம்தேட முற்படுவதில் சில வழிகளை அறிஞர்கள் சுட்டிக் காண்பிக்கிறார்கள். உள்நாட்டிலோ அல்லது வெளிநாட்டிலோ கடன் வாங்குவதின் மூலமாகவோ, அல்லது நாணயத்தின் மதிப்பை மாற்றியமைப்பதின் மூலமாகவோ மூலதனம் பெறலாமென்பது தான் அறிஞர்களின் கருத்தாகும். புதிய வரிகளைப்போட்டு மூலதனம் திரட்ட முற்படக்கூடாதென்றும் அறிஞர்கள் வற்புறுத்துவதையும் நாம் கவனிக்க வேண்டும். பொருளாதார நிபுணர்களின் ஆராய்ச்சி புள்ளி விபரங்களின்படி வரிசெலுத்துவதின்மூலம் பொதுமக்களின் நிலைமை வருங்காலத்தில் வெகுவாக பாதிக்கப்பட்டுவிடக்கூடுமென்பதாகும். அதிகமான வரியை வசூலிப்பதின்மூலம் ஏழை, ஏழையாகத்தான் வேண்டும், பணக்காரர்கள் பெரும் பணக்காரர்களாக முடியுமென்பதை பொருளாதார நிபுணர்கள் எச்சரிக்கிறார்கள். இந்த தவறான முறையை நாம் சிருஷ்டித்துக்கொள்வது, புனரமைப்பு திட்டத்தை வெகுவாக பாதித்துவிடக்கூடுமென்பதை அரசாங்கம் நன்கு உணரவேண்டும்.

பொது மக்களின் மேன்மையான உணர்ச்சிகளும், நன்னடக்கைகளும் அதிகார வர்க்கத்தினரால் பெரிதும் இப்பொழுது பாதிக்கப்பட்டிருக்கின்றன. அதிகாரிகளை பொது மக்கள் அச்சத்துடன்தான் பார்க்கிறார்கள். அன்னியராட்சி இங்கு இருந்ததற்கு இது ஒன்றே போதிய சான்றாகும். அன்னியராட்சி மறைந்து சுயாட்சி ஏற்பட்டதினால் அதிகாரவர்க்கத்தினரின் அடிப்படைமாறியதாகத்தெரியவில்லை. அதிகாரிகள் அதிகாரம்செய்ய பிறந்தவர்களாகவேதான் இன்னும் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். பொது மக்கள்தான் தங்களுடைய எஜமானர்கள் என்று அதிகாரிகள் உணரவில்லை, நம்தேசத்தில் காங்கிரஸ் கட்சி ஆட்சி செலுத்திறதென்றால் பொது மக்கள் ஆட்சிபுரிகிறார்கள் என்று சொல்வதுபோலாகும். இவ்வுண்மையை காங்கிரசும், அரசாங்கமும் உணரவேண்டும். வருங்காலத்தின் நன்மைக்காக காங்கிரஸ் கட்சி பெரிய பொறுப்பு ஏற்க வேண்டியிருப்பதால், நாம் மேற்சொன்ன குறைகளை போக்காவிடில் காங்கிரஸ் கட்சி ஆட்சிபுரிவதற்கு ஆதாரமேகாண முடியாது. இத்துடன் இன்னொரு விஷயத்தையும், மத்ய, மாகாண அரசாங்கங்கள் கவனிக்க வேண்டும். எதற்கெடுத்தாலும் சட்டமியற்றும் கொள்கையை கைவிடவேண்டும். இல்லாவிடில் அடிமைத்தனம் மேலோங்க முற்படும். எந்ததேசத்தில்சட்டங்கள் அதிகமாகின்றனவோ, அந்த தேசத்தில் அடிமைத்தனம்தான் தோன்ற முடியுமென்பது சரித்திரம் கூறும் உண்மையாகும்.

காங்கிரஸ்கட்சியும்,அதன்சார்பில் நிர்வாகியும், மந்திரிகளும், அதிகாரவர்க்கத்தின்அமைப்பையும்,அதிகாரத்தின்தன்மையையும் உடனே மாற்றியமைக்க வேண்டும், இதில்பின்வாங்கினால் வருங்காலத்தில் காங்கிரசானது அதிகாரவர்க்கத்தின் கைபொம்மையாகிவிடும்.இக்கருத்தை ராஷ்டிரபதி ஸ்ரீ பட்டாபி சீதாராமையா, ஜய்ப்பூரில் தன் அக்ராசனப் பிரசங்கத்தில் தெரிவித்திருப்பதை நாம் கவனிக்கவேண்டும். ஒவ்வொருதேசத்தின் அரசியலிலும் மந்திரிகள் வந்து கொண்டும், போய்க்கொண்டும்இருப்பார்கள், ஆனால் அதிகார வர்க்கத்தினர் மட்டும்நிரந்தரமாக இருந்துவருவதுபழக்கமாகும். இந்த நிரந்தர உத்தியோகத்தினரின் அடிப்படையையும், அதன் தன்மையையும் மாற்றியமைக்காவிடில் அரசாங்கக் கட்சியானது தேர்தலின்போது பொதுமக்களிடம் வாக்குறுதி கூறிய காரியங்களை நிறைவேற்ற முடியாமல் போய்விடக்கூடும். நாளடைவில்பொது மக்களின் வெறுப்புக்குள்ளாக வேண்டும். இந்தியாவிலுள்ள அதிகார வர்க்கமானது பிரிட்டிஷாரினால் சிருஷ்டிக்கப்பட்டது. இந்த உத்தியோக வர்க்கத்தினரின் போக்கானது ஜனநாயக நிலைக்கு பொருந்தாமலிருந்து வருவதை நாமறிவோம். தேசிய அரசாங்கத்தின் கொள்கைகளுக்குத் தக்கபடி இவர்களுடைய மனப்போக்கு மாறியாகவேண்டும். உத்தியோகவர்க்கத்தினரின் அமைப்மை மாற்றுவதென்பது கடினமான பிரச்னையாக இருந்தாலும், அவசியத்தை முன்னிட்டு வருங்காலத் திட்டத்தில் இச்சீர்திருத்தம் இடம்பெற வேண்டும்.

வருங்காலத் திட்டத்தின் கீழ், கல்வி, சுகாதாரம், சிறைச்சாலை சீர்திருத்தம், நீர்பாசனம், கைத் தொழில், நிலச் சீர்திருத்தம், தொழிலாளர்களின் நலன் ஆகியவற்றின் சம்பந்தமாக அனேக சீர்திருத்தங்கள் உலகத்து நாடுகளை ஒட்டி செய்யவேண்டும். இத்தகைய விஷயங்களில் இந்தியா முழுவதற்கும் ஒரேவிதமான திட்டத்தை மேற்கொள்ள வேண்டியதவசியமாகும், இதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. நம் சௌகர்யத்துக்கேற்ற முறையில் எந்த வழியையும் மேற்கொள்ளலாம். எல்லா மாகாணங்களிலுமுள்ள மந்திரிகள் (அதாவது மேற்சொன்ன இலாகா மந்திரிகள்) ஒன்றுகூடி விவாதித்து ஒரு திட்டத்தை வகுப்பது ஒரு வழியாகும். மற்றது தேசத்திலுள்ள எல்லா கட்சிகளின் ஆதரவில் ஒரு நிபுணர் கமிட்டி ஏற்படுத்தி அதன்மூலம் ஒரு முடிவுக்கு வருவதாகும். இந்த வழிகளைப்பற்றி சற்று சிந்தித்தால் ஒரு சந்தேகம் தோன்றமுடியும். அதாவது மாகாண நிர்வாகத்திலிருக்கும் பிரச்னைகளில் மத்திய அரசாங்கமோ, அல்லது நிபுணர் கமிட்டியோ மேலதிகாரம் செலுத்த முடியுமென்பதுதான். ஜனநாயக ரீதியிலும், வருங்கால நலனையும் நாம் கவனித்தால் இந்த சந்தேகத்திற்கு இடமளிக்கமுடியாது.



நம்தேசமானது மிகப்பெரிது. இதிலுள்ள மாகாணங்கள் ஒவ்வொன்றும் ஐரோப்பாவிலுள்ள ஒரு சில தேசங்களைவிட மிகப் பெரியதாகும். ஆகையால் மாகாண அரசாங்க நிர்வாகங்களில் மத்திய அரசாங்கம் மேலதிகாரம் செய்ய வகையில்லாதவாறு புதிய அரசியல் கூட்டம் ஏற்படப்போவதால், மாகாணங்கள் சுயாட்சி கொண்டதாகவே விளங்கும். மத்தியஅரசாங்கத்தின் முடிவே எந்த மாகாண அரசாங்கமும், எவ்வித மாற்றமுமில்லாமல் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தம் கிடையாதென்பதையும் நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். திறமையுள்ள அரசாங்கம் அமைய வேண்டுமானால் நாம் அனாவசியமான சந்தேகங்களை மேற்கொள்ளக்கூடாது. அத்துடன் வாதப்பிரதி வாதிகளையும் குறைத்துக் கொள்வதின்மூலமே வருங்காலம் சுபீட்சமாக இருக்க முடியுமென்பது உறுதியாகும்.



# புராணக் கதைகள்

சிவராமகிருஷ்ணஐயர்.

ஒவ்வொரு நாட்டின் இலக்கியத்துறையிலும் புராணக் கதைகள் (Myths) உள்ளன; அந்நாட்டு இலக்கியங்களில் தனியிடமும் பெற்றுள்ளன. அவை நாட்டு மக்களுக்கு மகிழ்ச்சி யளிப்பதுடனன்றி, பல நீதிகளையும் புகட்டுவனவாய் அமைந்துள்ளன. 'Myths' என்ற ஆங்கில பதத்துக்கு உலக நிகழ்ச்சியல்லாத 'பொய்க் கதை' என்று அடிப்படைப் பொருள். அதற்குப் 'புராணக் கதை' என்ற மொழிபெயர்ப்பைத்தான் என்னால் கொடுக்க முடிந்தது. 'புராண' என்றசொல் பழமை ஒன்றையேகுறிக்கிறது; ஆனால் அவைகளும் 'பொய்க் கதை'களே (Legends).

மேனாட்டுப் 'பொய்க்கதை'களில் பண்டைக்காலந்தொட்டு இன்றளவும் பிரசித்திபெற்றுள்ளவை கிரேக்க நாட்டைச் சேர்ந்தவையே. ஐரோப்பிய உலகின் கலாச்சாரத்துக்கு கிரேக்க நாடு பிறப்பிடமாக உள்ளது; எனவே அந்நாட்டுப் பழங்கதைகள்—முக்கியமாக ஆதிகவியான ஹோமரின் 'இலியட்', "ஆடிஸ்ஸி" என்ற இரண்டு பழம்பெருங்காவியங்களடங்கிய கதைகளும்—உலகில் பல நாடுகளிலும் பரவியுள்ளன. பல பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன, பல எல்லைக்கோடுகளையும் கடந்து, இந்தியா முதல் பெரு வரையிலும்கூட அக்கதைகள் சென்றுள்ளன என்று இலக்கிய ஆசிரியர்கள் கூறுவர். கிரேக்க கதைகளுக்கு ஒப்பானதாகக் கூறத்தக்கவை யூதர்களுடைய கதைத் தொகுதியும் பிரிட்டிஷாருடைய கதைத் தொகுதியுமே. 'ஆர்தர் மன்னனும் அவரது வட்டமேசை வீரர்களும்' என்ற கதையும், "நோவாவும் அவரது கூண்டும்" என்ற விவிலிய நூற் கதையும் படியாத மாணவர்களிலர் என்று கூறலாம்.

யூதர்களுடைய கதைத் தொகுதி பழைய ஏற்பாட்டில் (Old testament) அடங்கியது போல, கிரேக்க கதைகள் பலவற்றையும் முறைப்பட ஒன்றாகத் தொகுக்கும் வேலை சென்ற 19-ம் நூற்றாண்டில் நடைபெற்றிருக்கிறது. நாகரிக மற்றனவும் முன்பின் முரணானவையுமான அம்சங்களை விடுத்து, இந்த வீரச்சுவை மிகுந்த கதைகளை மக்களுக்குத் தொகுத்துச் சமர்ப்பித்தல் இலக்கியத்துறையில் பெருஞ் சேவையாகும் என்று கூறவேண்டியதில்லை. கிறிஸ்துவப் பாதிரி



மார்கள் தங்கள் சுயப்போக்கில், இக்கதைகள் எல்லாவற்றையுமே கேவலமாகக் குறிப்பிடுவதும் வழக்கமாயிருந்திருக்கிறது. அது ஆதாரமற்ற செய்கையாகும். ஆங்கில இலக்கியத்தில் "இங்க்ஸ்லி என்பவரின் "வீரர்கள்" என்ற நூல் இந்தத் திசையில் மக்களுக்கு அளித்த இன்பமும் மகிழ்ச்சியும் குறிப்பிடத்தக்கது. சில முக்கிய கதைகள் அதில் இடம்பெறவில்லை என்பதற்காக இந்நூலுக்குள்ள முக்கியத்துவத்தை மறுக்கமுடியாது. திறமையுள்ள ஆசிரியர்களால் இப்பழம் பெருங்கதைகள் எத்தனைமுறை மீண்டும் மீண்டும் எழுதப்பெறினும் அவற்றின் சுவையும்பெருமையும் குன்றாது.

நம் இந்திய நாட்டுப் பழங்கதைகளை (புராணக்கதை) எடுத்துக் கொள்வோம். மிகப்பழைய காலத்தவையான புராணங்களில்-வாயுபுராணம், விஷ்ணு புராணம். இவற்றில்—சரித்திர வரலாறுகள் வெகுவாகக் கலந்து கிடக்கின்றன. இவைகளேவேத கால சரித்திரக்கால வரைக்கு ஒரு விதத்தில் சரித்திர ஆராய்ச்சியாளருக்குப் பயன்பட்டுள்ளன. முதன் முதலாக வீரகாவியங்களில், 'பொய்க் கதை'கள் வெகுவாக இடம் பெறுவது 'பாகவத' நூலிலேதான் என்று கூறலாம். மனுஷ்யனாகப் பிறந்து வாழ்ந்த கிருஷ்ணனைக் கடவுளாக்கி, அவரது ஒவ்வொரு இளம்பிள்ளை விளையாட்டையும் தெய்வத் தன்மையுள்ளதாகச் செய்யப்பட்டுள்ளது இந்த நூலில். சிறு குழந்தைகளுக்கு இன்பமும் நீதியும் புகட்டவல்ல 'பொய்க் கதை'களில் பாகவத நூலுக்குத் தக்க இடம் உண்டு. பாகவத நூல் தோன்றிய காலத்தில்தான் மாபாரதமும், இடையிடையே நீதிக்கதைகள் விரவப்பட்டு இன்றைய மிகப் பருத்த உருவில் ஆக்கப் பெற்றது. கிரேக்க கவியான ஹோமரின் இரு பெருங் காவியங்களைப் போல எத்தனையோ மடங்கு அதிக நீளம் வாய்ந்தது மகா பாரதம் என்று கூறுவதுண்டு.

'பழங்கதைகள்' உலகில் மைற்கல்களாகத் திகழும் இப்பெரும் நூல்கள் தவிர, பிற்காலத்தெழுந்த, சரித்திர சம்பந்தமேயற்ற, மதப்போக்கே பிரதான அம்சமாகக் கொண்ட சிவபுராணம், லிங்க புராணம், ஸ்கந்த புராணம் போன்ற 'பொய்க் கதைகள்' நம்மிடையே வாரிதி போலப் பெருகிக் கிடக்கின்றன. 'புராணக் குப்பைகள், என்று ஒரேயடியாக இவற்றைக் கழிப்பது இலக்கிய ரசனை குன்றிய போக்கின் அறிகுறி என்றே கூறலாம். பொய்யான போக்கே இக்கதைகளின் முக்கியமான தன்மை. கடவுள் மனிதனுடன் ஒன்றாக நின்று, நடந்து செயலாற்றுதல் என்ற அடிப்படை உலக இலக்கியத்திலேயே பண்டைய கால இலக்கியங்களின் பொதுவான அம்சமாகும். அதை ஒரே மூச்சில்

தள்ளுபடி செய்யாது, அக்கதைகளை நன்கு தொகுத்து, முரண்பாடுகளையும் அநாகரிகமான நிகழ்ச்சிகளையும் நீக்கிவிட்டுச் சிறுவர்க்கு உபயோகுமாகும் வகையில் இலக்கிய உலகுக்குச் சேவை செய்வது பெரும்பணியாகும்.

தமிழகத்துக்கு வருவோம். தமிழ் மொழியில் ஆதிகாவியமாகத் திகழும் தொல்காப்பியத்தில் நிலத்தின் ஐம்பெரும் பிரிவுகளுள் ஒவ்வொன்றுக்கும் ஒரு கடவுளர் இடம் பெற்றுள்ளனர். கடவுளர் ஐவரும்-முருகன், காட்டகத்துத் ''திருமால்'' ஆகிய பசுபதி, இந்திரன், வருணன், காளி இவர்கள் கொள்கையளவில் அமைந்தவர்களே. உண்மையாகப் பிறந்து, வளர்ந்து செய்கை ஆற்றினவர்களில்லை. மனுஷ்ய உலகில் ஒவ்வொரு குணத்தையும் தன்மையும் உருவகப்படுத்தித் தோற்றுவிக்கப்பட்ட கற்பனைச் சித்திரங்களே. இக் கற்பனையைப் 'பொய்யானவை' என்பதற்காக யாரும் புறக்கணிக்க முடியுமா? முடியாது. பின்னர், மதப்பற்று கட்டுக் கடங்காது. பெருகிய காலத்தில், பிந்திய காலத்தவையான லிங்க புராணம், கந்த புராணம், தேவி புராணம் போன்ற அதிசயோக்தி நிகழ்ச்சிகள் மிதம் மிஞ்சியுள்ள 'பொய்க் கதைகள்' தோன்றலாயின.

உலகத்தில் பல்வேறு நாடுகளிலும் நம்பிக்கை மிகுந்து விளங்கிய ஒருகாலம் நிகழ்ந்துள்ளது. மக்கள் பக்தி மிகுதியாலோ, எழுத்தறிவு அதிகமாகப் பரவாத காரணத்தாலோ இது சாத்தியாகமாக இருந்திருக்கிறது. ஆங்கிலத்தில் இக்காலத்தை 'Age of Faith' என்பார்கள். எழுத்தறிவு பரப்பப்பட்டதுடன், சரித்திரப்போக்கு உணர்ச்சியும விஞ்ஞான நோக்கம் அதிகரித்துவரும் இந்நாளை 'Age of Reason' என்பர் அதற்கேற்ப முருகனுடைய வீரச் செயல்களை முரண்பாடுகளின்றியும் அநாகரிகச் செயல்கள் இடம் பெறுமலும் தொகுத்துரைப்பது, இன்றைக்கும் இலக்கியத்துறையில் ஒரு பெருந்தொண்டாகும். 'குமரன்' ஆற்றும் வீரச்செயல்கள் நாட்டில் உள்ள இளைஞர்க்கு மகிழ்ச்சியும் ஊக்கத்தையுமே ஊட்டும்; அத்துடன் வீரத்தையும் ஞானத்தையும் ஊட்டும் என்றுகூறலாம். திருச்செந்தூர் (ஜயந்திபுரம்) 'திருத்தணிகை' திருப்பழனி இந்தத் தலங்களுடன் தொடர்ந்து சிறப்புறும் முறுகவேளின் திருவிளையாடல்களை கிரேக்கநாட்டுப் பழங்கதைகளுக்கும் மேலாகக் கூறலாகும்.

'ஆலவாய்' என்ற மதுரை நகருக்கு அப் பெயர் வந்த விதம் ஒரு சுவைமிக்க கதை. மதுரைக் கதிபதியான சோமசுந்தரக் கடவுள் சங்கப் புலவர்களுக்குத் தலைமை தாங்குவதும், எளிய புலவனுக்குத் துணைபுரிவதும், செருக்குற்றவரை ஒறுப்பதுப் சிறப்புமிக்க இலக்கியப் 'பொய்க் கதைகள்' எனலாம். திருவிளையாடல் புராணமே, இத்தகைய நோக்குடன் கையாளப்பெறின் உலக இலக்கியத்திலேயே முக்கிய இடம் பெறலாம். ஆங்கிலத்தைக் கற்று, நம் இளஞ்சிறுர்கள் கிரேக்க, யூத ஆங்கில பொய்க் கதைகளையும் படிப்பதில்காட்டும் சிரத்தையை நமது நாட்டுப் பழங்கதைகளுக்குத் திருப்பிவிட வேண்டும். மேனாட்டுப் பழக்க வழக்கங்களிடம் நாம் கொண்டுள்ள அடிமை மனப்பான்மை ஒழிய வேண்டும். தமிழ் நாட்டுப் 'பழங் கதைகள்' பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு உலகெங்கும் பரப்பப்படல் வேண்டும். உலகிலுள்ள தெருவெங்கும் தமிழ் முழக்கம் செழிக்க வேண்டுமென்பதே பாரதியின் ஆசைக்கனவு என்பதில் ஐயமும் உண்டோ! தமிழ் வாழ்க.

---

# அடுக்களையும் தண்ணீர் வசதியும்

மு. மரகதவல்லி அம்மாள்.

[திருச்சி வானொலியில் 2-6-49ல் ஒலிபரப்பப் பெற்றது.]

நாகரிகம் முற்றி வருகிற போது அடுக்களையும் அதில் கலக்காமல் முடியுமா? அடுக்களை வேலையை, அதாவது சமையல் வேலையைப் பெண்களே செய்து வந்தார்கள். இப்பொழுதும் கிராமங்களில் அந்தப் பழக்கம் இருந்தே வருகிறது. காலக்கிரமத்தில் பெண்கள் படிக்க முற்பட்டு உலக நாகரிகத்தையறிய அறிய அடுப்படி வேலை நழுவி ஆண்கள் கைக்குப் போய்க் கொண்டிருக்கிறது. தற்காலக் கல்விச்சாலைகளில் நம் நாட்டில் அடுக்களை வேலைப் பயிற்சிக்கு இடமில்லை. எனவே அங்கே பயின்று வரும் பெண்கள் இதனைப் பொருட்படுத்தவில்லை. தவிர இந்த அடுப்படித் தொழில் நாகரிகமானவர்கள் மேற்கொள்ளக் கூடிய நாசூக்கான வேலையாகவுமில்லை. சிறந்த பட்டாடைகளைக் கட்டிக் கொண்டு நல்ல டாய்லட்டுகளை உபயோகப்படுத்தித் தலைபின்னி ஈசிச்சேரிலிருந்து கொண்டு காபி கொண்டுவா என்று சொல்வது உல்லாசமாகத்தானிருக்கிறது. உத்தியோகத்திலிருக்கிற பெண்களும் வேறு பொது வேலையிலோ படிப்பைக் கொண்டு செய்யப்பட வேண்டிய தொழிலிலேயோ ஈடுபட்டுள்ள பெண்களும் இந்த அடுப்படி வேலையை விடுவதனால் ஒன்றும் பாதகமில்லை. ஆனால் அப்படிப்பட்ட பொறுப்பும் அவசியமுமுள்ள சிலரைத் தவிர மற்றப்படியுள்ள பெண் சமூகம் சமையல் தொழிலைப் புறக்கணிப்பது சரியல்ல. இந்த முறை நேராக இருக்குமானால் அடுப்படி முறையே மாறுபட்டிருக்கும். நாகரிகமுள்ள பெண்கள் சமையலை ஏற்கும் போது சமையலறையே புத்துயிர் பெறும். ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒவ்வொரு சமையல் தேவைப்படுகிறது. அப்படியாக ஒவ்வொரு சமையறைக்கும் ஒவ்வொரு சமையலாள் தேவையென்று பெருகி வருதலால் ஏற்படும் சமையலாள் பஞ்சம் பெரிதாகி வருதலையும் காண்கிறோம். தவிர எத்தனை சிறந்த சமையலாள் இருந்தாலும் வீட்டுப் பெண்கள் அதிலீடுபடுவது முடியுமானால் அங்கே நடக்கிற மாதிரி வேறாகத்தானிருக்கிறது.

கிராமங்களிலும் பட்டினங்களிலும் எந்த வசதியையும் ஒரு மாதிரியாகச் செய்வதற்கில்லை. கிராமங்களிலிருக்கிற குடிசைகளுக்கும் இந்த அடுப்படி வசதி இன்றியமையாததாகவேயிருக்கிறதென்று சொல்லவேண்டியதில்லை. அந்தக் குடிசையிலும் சமையலறை தனியாக இருப்பதே நலம். சமையலறை வேலை தொடங்கப்பட்டதும் முதலில் மண்டி எழுவது புகைதான். இந்தப் புகையைப் போக்குவதே சமையலறை அமைப்பின் முக்கிய பாகம் என்று கூறலாம். தீமூட்ட ஆரம்பிக்கவே புகை கிளம்பி வீடு முழுமையும் பரவி அங்கிருப்பவர் அத்தனை பேருடைய கண்களையும் கசக்கிச் சிவக்கச் செய்வதைக்காணலாம். கிராமக் குடிசைகளில் ஒரே கூரை வாரமாக இருப்பதால் மேலே புகை போக்கி அமைப்பது முடியாத காரியமாக இருக்கிறது. சில வீடுகளில் அடிப்படியின் சுவரில் சில துவாரங்களை அமைத்துப் புகை போகவும் வெளிச்சம் வரவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சில இடத்தில் அடுப்பின் உள்ளிருந்தே துவாரமிட்டுப் புகை வெளியே போகும்படி செய்யப்படுகிறது. எப்படியானாலும் புகை உள்ளே சுற்றாமல் வெளியே போய் ஆக வேண்டும்.

இந்தப் புகை கண்ணைக்கெடுப்பதோடு நிற்பதில்லை. உள் வீடெல்லாம் புகுந்து ஓடு, கைமரங்களெல்லாம் அடையாகப் பற்றி அழகைக் கெடுக்கிறது. ஒட்டடையில் புகை பிடித்துக் கருங்குஞ்சங்களாகப் பல வீடுகளில் தொங்கிக் கொண்டிருப்பதையுங் காணலாம். தவிர இந்தப் புகை உணவு தயாராகும் பாத்திரங்களில் புகுந்து விட்டால் உணவு முழுதும் புகை நாற்றமெடுத்து உண்ண முடியாமல் போய்விடும். எனவே புகையை வெளியேற்றச் சரியான ஏற்பாடு செய்தல் வேண்டும்.

கெட்டிக் கட்டிடங்களில் புகை போக்கி அமைப்பது சுலபம். புதிய முறையில் கட்டப்படும் வீடுகள் இந்த வகையில் சிறந்திருக்கின்றன. சமையலறையின் முகட்டில் புகைப் போக்கியை அமைப்பதைவிட நின்று சமைக்கும் அடுப்படியின் அடுப்பிலிருந்து சுமார் நான்கடி உயரத்திலேயே கூண்டமைப்பது நலமாக இருக்கும். அறையின் உயரம் வரை புகை பரவிச் சென்று பிறகு வெளியேறுவதை விட கீழிருந்தே புகையை வாங்கி மேலே ஒரு குழாய் வழியாகக் கொண்டு போய் விடுவதுமிகுந்த பயனை அளிக்கிறது. புகைப் படலத்தை அடிக்கடி சுத்தம்செய்து வருதலும் அவசியமாகும். விறகு அடுப்பு முறையைவிட்டு கரி அடுப்புக்கு ஏற்பாடு செய்தால் இந்தப் புகைத் தொல்லை ஒழியும்.

சமையலறை சாப்பாட்டு அறைக்குப் பக்கத்திலிருப்பதே நலமாகும். சமையலறையில் தண்ணீர் வசதியுண்டாக்குவது ஒரு முக்கியமான காரியமாக இருக்கிறது. வெளியில் சென்று அடிக்கடி தண்ணீர் கொண்டு வருவதால் சமையலறையும்,

வருகிற வழியிலுள்ள இடங்களும் ஈரத்தாலும் ஈரமண்ணாலும் சுத்தமிழப்பது பார்க்கக்கூடிய விஷயம். இதற்கு இடங்கொடாமல் அடுப்படியிலேயே தண்ணீர் வசதிக்கு வழி செய்தல் வேண்டும். குழாய் வசதியுள்ள இடங்களில் சமையலறையினுள்ளே உயரமில்லாத ஒரு தொட்டி அமைத்து அங்கேஒரு குழாய்த் தலையை வைத்துவிடலாம். குழாய் வசதியில்லாத இடத்தில் வெளிச்சுவரில் ஒரு சிறு தகரத் தொட்டி வைத்து அதிலிருந்து உள்ளே சிறு குழாயின் மூலம் ஒரு தலை வைத்துவிடுதல் மிகவும் உபயோகமாக இருக்கும். இதனால் தண்ணீர் அசுத்தமடையாது. உள்ளே அதிக இடத்தையும் கேளாது.

அடுப்படியில் சமையற் சாமான்களை வைத்துக்கொள்ள ஒரு அல்மேரா அவசிமாகும். இது பெரும்பாலும் சுவரிலேயே அமைக்கப்பட்டிருப்பது நலம். இந்த அல்மேரா காற்று உள் நுழையும்படியும் எலி முதலியன நுழைய முடியாதபடியுமிருக்க வேண்டும். சமையற் பாத்திரங்களை வைத்துக் கொள்வதற்கு சுவரில் ஒரு அல்மேரா இருக்க வேண்டும்.

மின்சார விளக்கு வசதியுள்ள கட்டிடமானால் சமைப்பவரின் தலை நிழல் அடுப்பிலிருக்கும் பாத்திரத்தில் விழாதபடி விளக்கு அமைப்பதவசியம்.



மாவரைக்கும் கல்லும் அம்மியும் சமையலறையை அடுத்து மறைவுள்ள இடத்தில் இருப்பதே நல்லது. அதனையொட்டித் தண்ணீர்குழாய் இருக்கலாம். இரவு நேரத்தில் மாவரைக்கும்பொழுது புகை நிறைந்த நூலாம்படை தவறி விழுதல் கூடும். எனவே புகைபடாதவாறு தனியிடத்திலிருப்பது கூடுமானால் நன்மையாக இருக்கும்.

சமையலறையில் விறகு வைத்துக்கொள்ள ஒரு இடம் உயரத்தில் இருக்க வேண்டும். ஒன்றிரண்டு நாட்களின் தேவைக்குக் காணும்படியான விறகை அடைந்து வைத்துக்கொள்ள ஒரு பரண் அமைக்கவேண்டும். நின்று சமைக்கும் அடுப்புள்ள இடத்தில் அதன் அடியில் வைத்துக்கொள்ள இடமுண்டு பண்ணிக்கொள்ளலாம்.

கிராமங்களில் உள்ள வீடுகளில் சாப்பிடுவதற்கென்று தனியறைகள் அமைக்கப்படுவதில்லை. பழய முறையில் கட்டப்பட்ட வீடுகளில் போஜனஹால் இருந்தாலும் அடுப்படியிலேயே சாப்பாட்டை நடத்திவிடுவது சுலபமென்று கருதப்படுகிறது. எந்த முறையில் கட்டப்பட்ட வீடானாலும் சமையலறைக்குப் பக்கத்தில் சாப்பிடும் இடம் இருப்பது பொருத்தமாகும். சாப்பிடுமிடம் தனியறையாக இருப்பதே நல்லது. குடும்பத்தின் விரிவிற்கும் தகுதிக்கும் தக்கபடிவிருந்தினர்களோடுஉண்பதற்குவேண்டிய அளவு விசாலமுள்ளதாயிருக்கவேண்டும். சாப்பிடும் மேஜை நாற்காலிகள் அமைக்கலாம். அல்லது இருந்து உண்ணுவதற்குரிய பந்திஜமக்காளம் அல்லது பலகை ஆகிய வசதிகள் இருக்கவேண்டும். சமையல் செய்துவந்த பதார்த்த பாத்திரங்களை வைப்பதற்கு அறையின் ஒரு மூலையில் ஒரு மேஜையோ அல்லது ஒரு மேடையோ இருக்கலாம். பதார்த்தங்களை வைத்து பரிமாறுவதற்கேற்ற பாத்திரங்கள், கரண்டிகள், டம்ளர், தட்டுகள் முதலியவைகளையும், உப்பு ஊறுகாய்போன்ற பொருள்களையும் வைப்பதற்கு ஒரு அல்மேரா அவசியமாகும். அதை சுவரிலேயே அமைக்கலாம். உண்டு கையலம்புவதற்கு ஒரு சிறு தொட்டியும் குழாயும் சுவரின் ஆதரவிலேயே அமைக்கலாம்



குளிக்குமிடம் மிகவும் முக்கியமானது. நம் நாட்டுக் கிராமங்களில் உள்ள ஜனங்கள் குளிப்பதை முக்கியமாகக் கொண்டிருந்தாலும் அதற்கேற்ற வசதிகளை அமைத்துக்கொள்ளவில்லை. பொதுக் குளங்களிலும், ஏரிகளிலும்,குட்டைகளிலும் ஆண் பெண்கள் எல்லோரும் குளிப்பது சகஜமாக இருக்கிறது. வழக்கமாக நடந்துவருவதால் அதிலுள்ள குறைபாடுகளை அவர்களால் உணர முடியவில்லை. தவிர குழாய் வசதியோ கிணறு வசதியோ எல்லா வீடுகளுக்கும் செய்துகொள்ள முடியவில்லை என்பது மற்றொரு காரணம். கிணறுள்ள வீட்டுக்காரரும் கூட குளத்தில்போய் விழுந்து குளிப்பது சௌகரியமென்று கருதுகிறார்கள். பல கிராமங்களில் ஒரு குளத்திலேயே குளிப்பதும் துணிகள் துவைப்பதும் மற்ற அசுத்தங்களைச் செய்வதும், அந்தநீரையேக் கொண்டுபோய் சமையலுக்கும் குடிப்பதற்கும் உபயோகிப்பதையும் காண்கிறோம். பர்மாவிலுள்ள பல கிராமங்களில் நீர் நிலைகள் உள்ளன. கிணறு வசதிகள் இல்லை. ஆனால் அந்த நீர் நிலையில் நீர் எடுக்க முடியுமே தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாது. காலைத் தண்ணீரில் வைத்தால் கல்லெரியோ கத்தி வெட்டோ நிச்சயம். அவ்வளவு கண்டிப்பாக ஜனங்களே நீர் நிலைகளை உயிர் எனப்பாவிக்கிறார்கள். அங்கே ஆற்றங்கரைகளில் பெரும்பான்மையான ஜனங்கள் வசிக்கிறார்கள். ஆழமில்லாத ஆற்றங்கால்களில் குளிக்கும் இடங்கள் போதுமான மறைவோடு வீட்டின் அருகே கட்டப்பட்டிருப்பதைக் காணலாம். அப்படியே நீர் நிலைகள் மட்டும் உள்ள இடங்களில் மறைவான குளிக்குமிடங்கள் வீடுதோறும் உண்டு. மறைவிடத்தில் குளிப்பதே மிகவும் நல்லது. அந்தமுறை நம் நாட்டில் அலட்சியப் படுத்தப்பட்டிருக்கிறது. தீர்த்தக் கட்டங்களில் கூட தனித்தனி மறைவான இடங்கள் ஏற்படுத்தக் கூடுமானால் நல்லது. கட்டிடங்களில் குளிக்கும் அறை வகுக்கப்பட

வேண்டியது அவசியமாகும். பெரிய குடும்பங்கள் வசிக்கக் கூடிய இடங்களில் ஒன்றுக் கதிகமான அறைகளும் இருக்கலாம். குழாய்வசதி இல்லாத இடங்களில் கிணற்றுக்குப் பக்கத்தில் குளிக்கும் அறை யிருப்பது நல்லது. வெளியிலிருந்தே தண்ணீர் இறைத்து விடும்படி ஒரு குழாய் வழியும் உள்ளே ஒரு தொட்டியும் இருப்பது அவசியம். வென்னீர் உள்ளே கிடைக்கும்படி வென்னீர் வேம்பா இருக்கலாம். அல்லது அடுப்பு யிருக்கவேண்டும். அப்படியாயின் புகைபோவதற்குச் சரியான வசதி செய்யப்பட வேண்டும். அல்லது வெளியிலே வென்னீர்வைத்துக் குழாயின் மூலம் உள்ளேபோகும்படி செய்வது பயனுடையதாக இருக்கும். குளிக்கும் அறைக்குப் பக்கத்தில் ஆடை அலங்காரத்துக்குரிய அறை இருப்பதும் அதற்குக் குளிக்கும் அறையிலிருந்து பாதை யிருப்பதும் நல்லது.

இனிகழிபொருள்களை சுகாதாரக் கேடில்லாதவாறு அப்புரப்படுத்த வேண்டியது ஒரு முக்கிய விஷயம். நம்நாட்டுக் கிராம வாழ்க்கையில் இதைப்பற்றி யாரும் கவலை கொண்டதாகத் தெரியவில்லை. சிறு கிராமங்களில் ஜனங்கள் காலை மாலை நேரங்களில் வெளியேபோய் வந்துவிடுவார்கள். அங்கே கக்கூஸ் வசதி அவ்வளவு முக்கியமாகக் கருதப்படவில்லை. சிறு கிராமங்கள் பெரிய கிராமங்களாகிறபொழுது ஜனங்கள் ஊருக்கு வெளியே அதிகதூரம் போவதற்கு முடியாமல் போகிறது. பிறகு தேவையை உத்தேசித்து ஆறறிவுணர்ச்சி குறைந்து ஐயறிவுணர்ச்சிக்கு வரவேண்டி நேருகிறது. வீடு கட்டும்பொழுதே சிறிய கிராமமாயிருந்தாலும் சரி, பெரிய நகரமாயிருந்தாலும் சரி கக்கூஸ் வசதி செய்யவேண்டியது அவசியமாகும். நம்நாட்டில் இது ஒரு பெரிய கஷ்டமான மான பிரச்னையாக இருக்கிறது. மழையருவியும், சாஸ்வதமான ஆறுகளும் உள்ள இடங்களில் இவ்வசதியைச் சுலபமாகச் செய்யலாம். காந்தியடிகள் காட்டிய முறைப்படி காலி நிலத்தில் குழிதோண்டி உபயோகித்து உடனே மண்போட்டு மூடி விடலாம். இது அனுபவத்திலும் நல்ல முறையாகத்தான் இருக்கிறது. கக்கூசைச் சுத்தம் செய்வதற்குத் தோட்டிகளை எதிர்பார்க்க வேண்டியதில்லை. பல கிராமங்களில் கக்கூஸ் சுத்தம் செய்கிற வேலைக்கு தோட்டிகள் கிடைப்பதில்லை. இந்தத் தொழிலை வழக்கமாகச் செய்துவந்தவர்கள் தவிர மற்றவர்களைச் செய்யும்படி தூண்டவும் முடிகிறதில்லை. சிறிய கிராமங்களிலும், பெரிய கிராமங்களிலும் இந்த முறை கையாளப்படலாம். வீடுகள் கட்டும்பொழுது இதற்கென ஒரு பகுதியிடம் ஒதுக்குவதில் கஷ்டமில்லை வசதியுள்ள இடங்களில் எடுக்கும் கக்கூஸாகக் கொஞ்ச இடத்தை ஏற்பாடு செய்தலும் போதுமானது. இனி தண்ணீர்க் குழாய் வசதியும், பூமிக்குக் கீழ் கழிவு குழாய் வசதியும் உள்ள பெரியநகரங்களில் 'பிளஷ்அவுட்' முறை சாலச்சிறப்புடையது. இந்த முறையில் உள்ள கக்கூஸ்கள் கட்டிடத்தின் எந்த இடத்திலும் வைத்து உபயோகிக்கத் தகுதியுள்ளது.



படுக்கையறையிலிருந்து செல்லும்படி ஒரு குளிக்கும் அறை இருக்கவேண்டும் அந்த அறையை ஒட்டி இந்தக் கக்கூஸ் இருக்கவேண்டும். ஒரே கக்கூஸ் உள்ள வீடுகளில் குளிக்கும் அறையும், கக்கூஸும் தனித் தனியாக உபயோகிக்கும்படி அமைக்கப்படவேண்டும். சாக்கடை வசதியும், தண்ணீர்க் குழாய் வசதியும் இல்லாத பட்டணங்கள் பல உள்ளன. அங்கு அதிகமான இடவசதியும் கட்டிடங்களுக்குக் கிடைப்பதில்லை. இங்கேதான் கக்கூஸ் வசதி மிகவும் குறைபாடுடையதாக இருக்கிறது. இங்கே பிளஷ் அவுட் வைப்பதென்றால் ஒவ்வொரு வீட்டிற்கும் தனித் தனியாக வைக்க வேண்டும். கிணறு வெட்டி அதிலிருந்து தண்ணீர் உபயோகத்துக்கு எடுக்கவேண்டும். ஒரு வீட்டின் கிணற்றுக்கும் அடுத்த வீட்டுக் கிணற்றுக்குமிடையே சில அடிகள்தான் இருக்கும் பிளஷ் அவுட் கக்கூஸுக்கு கட்டப்படும் செப்டிக்டாங்க் கிணற்றுக்குப் பல அடிதூரம் தள்ளியிருக்கவேண்டியது அவசியமாகிறது. எனவே 'பிளஷ்அவுட் கக்கூஸ் அநேக வீடுகளில் வைக்க இயலாது. கிராமங்களில் வைக்கக் கூடிய இயற்கையான மண் கக்கூஸ் வைப்பதற்கும் இங்கே வசதியில்லை. ஆகவே தோட்டிகளைக் கொண்டு எடுக்கும் முறையையுடைய கக்கூஸ்தான் இங்கே அமைக்க முடியும். இந்தக் கக்கூஸ் முழுமையும் செமிண்டினாலேயும் கட்டப்படுகிறது. ஆனால் கழுவுவதற்குப் போதிய வசதியில்லாததினாலும், கழுவிய நீருக்குப் போக்கிடமில்லாததினாலும் தளத்தில் மண் போட்டு உபயோகிப்பதே நல்லது. சில மாதங்களுக்கு ஒரு முறை மண்ணை வெட்டியெடுத்து மாற்றிவிடலாம்.

இனி வீடுகளில் சாக்கடை விஷயம் ஒரு பெரும் பிரச்னையை தருகிறது. வெயில் நாட்டில் எப்படியும் தண்ணீர் தாராளமாகக் கிடைப்பதற்கில்லை. ஆகவே இதை காயும்படி விடுவதுதான் முடியக்கூடிய காரியம் தண்ணீர் மிகுதியாகக் கிடைக்கக் கூடிய இடங்களில் மூடு சாக்கடைகள் மூலம் ஊருக்கு வெளியே கொண்டுபோவதற்கு வசதியுள்ள இடங்களில் சாக்கடை விவகாரம் பாதிப்பதற்கில்லை. மூடு சாக்கடை வசதியில்லாத ஊரில் சாக்கடை விஷயம் மிகவும் கஷ்டத்தைத் தருகிறது. வீதிகளில் சாக்கடைத் தொட்டிகளைக் கட்டி

அதில் வீட்டிலுள்ள அசுத்த நீரை நிரப்பி வைப்பதும், அதை வண்டிகளில் எடுத்து வெளியே கொண்டுபோய்க் கொட்டுவதும் சகிக்கமுடியாத காரியமாயிருக்கிறது. தொட்டியில்லாத இடங்களில் வீதியோரங்களில் நின்று நுறைக்கின்றன. சாக்கடை விஷயத்தில் கடல் ஆறு முதலியவைகளில் அதைக் கொண்டுபோய்க் கழிக்க வேண்டும். அல்லது எப்படியாவது வெயிலில் விட்டுக்காயவிட வேண்டும். வீடு அமைக்கும்போது சாக்கடையை என்ன செய்வது என்று யோசிக்க வேண்டும். வீட்டில் உள்ள சாக்கடைகளை ஒன்றுசேர்த்து ஒரு பெரிய குழிவெட்டி, மணலைக் கொட்டி அதில் விட்டுவிடலாம். சில மாதங்களுக்கொருமுறை அவசியமானால் மணலை மாற்றலாம். இந்தச் சாக்கடை நீரை மணல் உள்ளே இழுத்துக் கொள்கிறது. சாக்கடை வண்டல் மேலே நிற்கும். அல்லது காய்ந்துபோகும் அந்த வண்டலை வாரந்தோறுமோ அல்லது இரண்டு வாரத்திற்கொருமுறையோ அப்புறப்படுத்திக் காயவிடலாம். அங்குள்ள நிலம் மண்புற்றாகவோ மணற்பாங்காகவோ இருந்தால் இம்முறை முழு வெற்றிதரும். பாராங்கல்லாக இருந்தால் அவ்வளவு பயனளிக்காது. சாக்கடை நீரை வாய்க்காலாக வெட்டி சில தினங்களுக்கு ஒருமுறை மாற்றி நீரை போகச்செய்தும் காயவைக்கலாம். எப்படியும்சாக்கடைநீரைத் தேங்கவிடாது வெயிலில் உலர வைக்க வேண்டும். அல்லது வாழைமுதலிய சில பயிர்களை அதிக நெருக்கமில்லாமல் சாக்கடைநீர் பாயும்படி பயிரிடலாம். ஆனால் பாய்ந்தும் காய்ந்தும் வரும்படி கவனித்து வர வேண்டும்





# பிரார்த்தனைப் பொன்மொழிகள்

(●)

திரு டி. எஸ். சிவராமகிருஷ்ணன், B. A.

6—10—47

இன்று காந்திஜியின் மௌன விரத நாள்; எனவே அவருடைய எழுத்துப்பிரசங்கம் வாசிக்கப்பெற்றது. அதன் சாரம் வருமாறு:- "இயற்கை பஞ்சத்தினாலும் செயற்கைப் பசஞ்சத்தினாலும் பட்டினிச்சாவும் பல்லாயிரக்கணக்கில் மக்கள் மடிவதும் இந்த தேசத்துக்குப் புதிதல்ல; ஆனால் நன்கு அமையப்பெற்ற ஒரு சமூகத்தில், தண்ணீர்த்தட்டு உணவுப்பஞ்சம் இவைகளுக்குத் தகுந்த பரிகாரங்கள் எப்போதும் முன்கூட்டியே திட்டமாக இருக்கவேண்டியது மிகவும் அவசியம்" என்று பிரசங்கத்தில் குறிப்பிட்டிருந்தது. "நன்கு அமையப்பெற்ற சமூகம்" எவ்வாறிருத்தல் வேண்டுமென்பதைஇப்பொழுது ஆராய்வதற்கில்லை. அச்சமூகம் இத்தகைய பஞ்ச நிலையில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பதையும் நான் கூற வரவில்லை. ஆனால் இன்றைய உணவுத்தட்டை இந்நாடு வெற்றிபெறச் சமாளிக்கமுடியுமா என்பதே நமது கவலை-முடியும் என்பதே எனது அபிப்பிராயம். முதன் முதலாக நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை தனக்குத்தான் உதவிக்கொள்வதும் தன்னம்பிக்கையுமே"

"இந்தப் பாடத்தை நாம் மனதில் வாங்கிக்கொண்டால், மற்ற நாடுகளையே எதிர்பார்த்து நம்பியிருக்கும் படுமோசமான அடிமை நிலையினின்றும் இறுதியில் நம் செல்வநிலை அழிந்துபடுவதினின்றும் உடனடியாக நாம் தப்பித்துக்கொள்ளலாம். இது இறுமாப்புடன் கூறிய வார்த்தையல்ல; இது உண்மையானபேச்சு. நம் நாடு சிறிய நாடல்ல; உணவுப் பொருள்களுக்கு வெளி நாட்டு உதவியை நோக்கி நிற்கத் தேவையில்லை. நம் நாடு ஒரு உபகண்டம்; நம் மக்கள் கிட்டத்தட்ட 40 கோடி உள்ளனர். நம் நாட்டில் பிரமாண்டமான நதிகள் உள்ளன. நிலவளமும் கால் நடைச் செல்வமும் ஏராளமாக இருக்கின்றன. நமது கறவை மாடுகள் நமக்குப்போதுமான பாலைக் கொடுக்கவில்லையே என்றால், அது நம்முடைய தவறு. நமக்குள்ள பசுச் செல்வத்தைக் கொண்டு எந்த நிமிஷத்திலும் நமக்கு அத்தியாவசியமான பால் அவ்வளவையும் நாம் பெறக் கூடும்"

"சென்ற சில நூற்றாண்டுகளாக நாம் நமது நாட்டின் நலனை அலட்சியம் செய்யாதிருந்திருப்போமாகில், இன்று நமக்கு

தேவையான உணவனைத்தும் கிடைப்பதுடன், சென்ற மகா யுத்தத்தின் காரணமாகத் தவிக்கும் நிலையில் விடப்பட்ட உலகிலுள்ள பல நாடுகளுக்கும் தேவையான உணவை அனுப்பி அரிய சேவைசெய்யக்கூடிய நிலையிலிருந்திருப்போம். இந்த யுத்தச்சீர்கேடு நம் நாட்டையும் விட்டபாடில்லை. நமக்குநேர்ந்த சீர்கேடு அதிகமாகிக்கொண்டு வருகிறதேயொழிய, குறைந்து வருவதைக்காணோம்''

"நான் கூறும் யோசனை என்னவெனில், மனமுவந்து நமக்கு உணவுப் பொருள்களை உதவ முன்வரும் நாடுகளிடமிருந்து அவ்வுதவியை நாம் ஏற்போம்; இதற்காக ஒரு நாட்டையும் பிச்சை கேட்க வேண்டாம். அந்த வழிச்சென்றால் நமது தரங்குன்றும், மதிப்பு குறைந்துபடும். இது தவிர, ஓரிடமிருந்து மற்றோரிடம் உணவுப் பொருள்களை எடுத்துச் செல்லப்போதிய போக்குவரத்துவசதிக்குறைவு வேறு இருக்கிறது. துரிதமான போக்குவரத்துக்கு வசதியில்லை. போதாக்குறைக்கு, கிடைக்கும் உணவுப் பொருள்களிலும் உணவுக்கு அருகதையற்ற தானியங்களும் ஓரோர் சமயம் வந்துசேருகின்றன. அத்துடன் நாம் மனித சுபாவத்துடன் போராட வேண்டியிருக்கிறது என்பதையும் மறந்துவிடக்கூடாது; உலகத்திலேயே, மனித சுபாவம் பூரண பக்குவமான நிலையில் அல்லது அநேகமாய் பூரணமான நிலையில் எங்கும் காண்பதற்கு அரிதாக இருக்கிறது''

"அன்னிய நாடுகளின் உதவி எம்மட்டும் நமக்குகிடைப்பதாயிருக்கிறது என்பதைக் கவனிப்போம். நம்முடைய உணவுப் பொருள் தேவையில் மூன்று சதவிகிதந்தான் கிடைக்குமாம். இந்தத் தகவல் சரியாக இருப்பின் (மற்ற ஆதாரங்களிலிருந்து இத்தகவல் சரியானதென்று கண்டுகொண்டேன்) வெளி நாடுகளை உணவுப் பொருள்களுக்காக எதிர்பார்த்து நிற்பது தவறு என்பது நிச்சயமாகிறது. அத்துடன், நமக்குள்ள ஒவ்வொரு அங்குல உழவு நிலத்திலும், வியாபாரத்துக்கான பயிர்களை விட்டுவிட்டு, உணவுக்கான தானியங்களை நாம் பயிரிட்டு, நாட்டிலுள்ள உற்பத்தி வசதிகள் முழுவதையும் நாம் கையாளுவதினின்று, நமது கவனத்தை, வெளிநாட்டு உதவியானதுவேறு வழியினில் செலுத்திவிடும், அது விரும்பத்தக்கதல்ல. உடனடியாக சாகுபடிக்குக்கொண்டுவரக்கூடிய தரிசு நிலங்களைத் திருத்தியாகவேண்டும். உணவுப்பொருள்களை மத்திய நிர்வாகத்தின் கீழ்வைத்துக்கொள்வது கேடு விளைவிக்கும் என்பதே என் கருத்து. உணவுப் பிரச்னையை மாகாணங்களுக்கு விட்டுவிட்டால் கள்ளமார்க்கட்டுக்கு நல்ல அடிவிழும்; மேலும் போக்குவரத்துக்காகச் செலவாகும் பணமும் மிஞ்சும், கால



தாமதமுமின்றி உணவு வினியோகம் நடைபெறும். அந்த அந்த இடங்களில் பயிராகும் உபரி தான்யங்கள், பயறு, பருப்பு வகைகளைப் பூச்சி முதலியவை பாதிக்காது எவ்வாறு பத்திரப்படுத்துவது என்பது விவசாயிகளுக்குத்தான் தெரியும். இடம் விட்டு இடம் எடுத்துச்செல்லப்படும் தானியங்களுக்கு எலி முதலிய சிறு பிராணிகளால் ஏற்படும் சேதம் கொஞ்ச நஞ்சமல்ல.

இதனால் நாட்டிற்குப் பல லட்சக்கணக்கில் பணம் செலவாவதுடன், டன் கணக்கில் அத்தியாவசியமான தானியங்கள் இல்லாதும்போகின்றன. எங்கெங்கு எல்லாம் தானியங்களை விளைவிக்கலாமோ அங்கங்கெல்லாம் அவற்றை உற்பத்தி செய்ய வேண்டிய அவசியத்தை ஒவ்வொரு இந்தியனும் உணர்ந்தானேயானால், நாட்டில்உணவுத் தட்டு என்பது ஒன்று இருந்தது என்பதையே மறந்துவிட நேரிடலாம். உணவைப் பெருக்குவது என்ற மிக முக்கியமான பிரச்னையை நான் முழுவதும் எடுத்துச் சொல்லிவிடவில்லை; ஆனால் இந்த சிலாகிக்கத்தகுந்த முயற்சியில் எவ்வாறு இந்தியன் ஒவ்வொருவனும் உதவக்கூடும் என்பதில் உங்கள் கவனத்தை இழுக்கப் போதுமானதைச் சொல்லிவிட்டேன் என்றுமட்டும் நான் நம்புகிறேன்.

## ரேஷன் முறையின் குறைபாடுகள்

இப்போது, வெளிநாடுகளிலிருந்து நமக்குக் கிடைக்கக்கூடிய 3 சதவிகித தான்யங்களைப்பற்றிக் கூறுகிறேன். ஹிந்துக்கள், பட்சத்தில் ஒருநாள்—ஏகாதசியன்று உபவாசம் இருக்கின்றனர். முஸ்லிம்களும் பசியினால் வாடும் பல்லாயிரக்கணக்கான மக்களுடைய நலனைக் கருதி இவ்விதம் உணவைச் சற்றுத் தவிர்க்கக்கூடாது என்று யாரும் சொல்லிவிடவில்லை. இந்த முறையில், நாட்டு மக்கள் அனைவரும், ஓரளவு உணவைத் தவிர்ப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டால், வெளி நாடுகளிலிருந்து கிடைக்கக்கூடிய, நம் தேவையில் 3 சதவிகித உணவு இறக்குமதிகளும் தேவைப்படா; சற்று அதிகமாகவும் உணவு மிச்சப்படலாம்.

என்னைக்கேட்டால், உணவுக் கட்டுப்பாட்டினால் நன்மைகள் ஏதுமில்லை; இருப்பினும் வெகு அற்பமேயாகும். உற்பத்தி செய்வோரை நிர்ப்பந்தமில்லாது விட்டுவிட்டால், அவர்கள் தங்கள் உற்பத்திகளை மார்க்கட்டுக்குக் கொண்டுவந்து விற்பார்கள். எல்லோருக்கும் உணவுப் பொருள்கள் கிடைக்கும். ஆனால் இன்றைக்குக் கிடைப்பதோ கஷ்டமாகயிருக்கிறது.

எனது சுருக்கமான, உணவுப் பிரச்னையைப்பற்றிய விமர்சனத்தைமுடிக்குமுன் அமெரிக்க

ஜனாதிபதி ட்ரூமன் அமெரிக்க மக்களுக்குக் கூறும் வார்த்தையை உங்களுடைய கவனத்துக்குக் கொண்டுவருகிறேன். அமெரிக்கர்கள் தங்கள் உணவைச் சற்றுக் குறைத்துக் கொள்ள வேண்டுமென்றும், அதனால் பசியினால் வாடும் ஐரோப்பிய மக்களுக்கு அத்தியாவசியமான உணவை மிச்சப்படுத்தக்கூடும் என்றும், இவ்விதம் சற்று உணவைத் தவிர்ப்பதால் அமெக்கர்களின் உடல் நலன் பாதிக்கப்பட்டுவிடாது என்றும் அவர் கூறிவருகிறார். இத்தகைய ஜீவகாருண்யப் போக்கைக் கைக்கொண்ட ஜனாதிபதி ட்ரூமனுக்கு எனது வாழ்த்தைக் கூறுகிறேன். இந்த ஜீவகாருண்ய சமிக்ஞையின் அடிப்படையில் அமெரீக்காவுக்குப் பண உலகில் ஒரு சாதகத்தைத் தேடிக்கொள்ளும் சுய நலக் கருத்து உள்ளது என்று பலர் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள மறுக்கிறேன். ஒருவனை அவன் செய்யும் காரியங்களைக்கொண்டு மதிப்பிட வேண்டுமேயொழிய, எந்த எண்ணத்துடன் அவன் செய்கிறான் என்பதைக்கொண்டு மதிப்பிடக் கூடாது. ஒருவனுடைய அந்தரங்கமான கருத்தைக் கடவுள் ஒருவரே அறிவார்; மற்றெவர்க்குத் தெரியும்? அமெரிக்கர்கள், ஐரோப்பியர்களின் பசியைத்தணிக்க இம்முறையில் முன்வருகையில், நம்மவர்கள் நம்மவர்களுக்காகவே இந்த முறையில் ஏன் உணவைச்சற்றுத் தவிர்த்துக் கொள்ளக் கூடாது? ஒவ்வொரு நாட்டுக்கும் அணிகலமாயுள்ள தனது உதவி என்ற துறையில் நாம் நம்மாலியன்றமட்டும் பாடுபட்டோம் என்ற நற்பெயராவது நமக்குக் கிடைக்கலாகாதா? என்று கூறினார் மகாத்மா.

7—10—47

இன்றைய பிரார்த்தனைக் கூட்டத்தில் பேசுகையில் மகாத்மா கூறியதாவது:–

“நேற்றுமுதல் கம்பளிப் போர்வைகள் இன்னும் சில எனக்கு வந்துள்ளன. நன்கொடையாளர்களுக்கு எனது வந்தனம். ஆனால் வீடற்றுத் தவிக்கும் லக்ஷக்கணக்கான அகதிகளுக்கு இவ்விதம் துளித் துளியாகக் கிடைக்கும் உதவி எந்த மூலைக்குப் போதுமானது? குறுகிய காலத்தில் அதிகமாகப் போர்வைகள் சேகரிக்கப் பொது மக்கள் ஒரு திட்டம் வகுத்துக்கொண்டு, பெரும் பகுதி சேர்ந்தவுடன் எனக்கோ வேறு பொறுப்புள்ளவர்களுக்கோ அதை அனுப்பிவைத்தால் உதவியாயிருக்கும்.” என்று தமது பிரசங்கத்தைத் தொடங்கினார் மகாத்மா.

பிறகு, டேராடூனுக்கு அருகாமையில் ஒரு முஸ்லீம் கொல்லப்பட்டதைக் குறிப்பிட்டு வருத்தத்துடன் காந்திஜி கூறியதாவது; “அவர் செய்த தவறு தான் என்ன? முஸ்லிமாகப் பிறந்த ஒரே தவறுதான்! இந்திய டொமனியனிலுள்ள லக்ஷக்கணக்கான முஸ்லிம்களை நாட்டைவிட்டு வெளிச் செல்லுமாறு சொல்வது தகுமா? அது முறையா? அவர்கள் எங்கு செல்வார்கள்? புகைவண்டியில் பிரயாணம் செய்வதிலும்கூட அவர்கள் உயிருக்குப்பாதுகாப்பு இல்லையே! பாகிஸ்தானத்தில் ஹிந்துக்கள் இதேமாதிரியான கஷ்டங்களை அனுபவிக்கின்றனர் என்பது உண்மைதான். ஆனால், இருதரப்பிலும் தவறு இழைத்தால் அதனால் நற்பயன் கிடைத்துவிடாது! இங்குள்ள முஸ்லிம்களைத் துன்புறுத்துவதால் பாகிஸ்தானத்து ஹிந்து சீக்கியர்களுக்கு நலன் ஏற்பட்டுவிடாது. உங்களது மதக்கொள்கைகளுக்கும் காங்கிரஸினது கொள்கைகளுக்கும் விரோதமில்லாமல் நீங்கள் நடந்துகொள்ளவேண்டியது அவசியம்” என்று அழுத்தமாகக் கூறினார் மகாத்மா.

“சென்ற அறுபது வருஷகாலமாக காங்கிரஸ் நாட்டின் நலனுக்கு பாதகமாக ஏதேனும் செய்ததுண்டா? அவ்வாறிருக்கையில் இன்றைக்கு, அந்தப் பொது நம்பிக்கையை இழக்கும் வகையில் என்ன நேர்ந்துவிட்டது? உங்களுக்கு காங்கிரஸினிடம் நம்பிக்கை இல்லையென்றால், காங்கிரஸ் மந்திரிகளை அதிகாரத்தினின்று விலக்கிவிட்டு, மற்றவர்களை அதிகாரபீடத்தில் அமரச்செய்யுங்கள். அதைவிட்டுவிட்டு, சட்டநிர்வாகத்தை ஜனங்களே கையாளமுற்படக்கூடாது. ஒன்றைச் செய்துவிட்டுப் பிறகு வருத்தப்பட்டுப் பயனில்லை” என்று காந்திஜி எடுத்துரைத்தார்.

நேற்றையதினம் நான்உணவுக் கட்டுப்பாடு பற்றிக் கூறியவற்றைப் பொருத்தமட்டில், எனது யோசனையைப் பின்பற்றினால் உணவுத்தட்டுப் பிரச்னையில் மிகப் பெரும்பகுதி இருபத்து நான்கு மணி நேரத்தில் தீர்க்கப்பட்டுவிடும் என்பதே எனது துணிவு. நிபுணர்கள் என் யோசனையை ஏற்கிறார்களா இல்லையா என்பது வேறுகேள்வி என்று குறிப்பிட்டார் காந்திஜி.

மேலும் கூறுகையில், “பலர் என்னைக்கண்டு பேசுகின்றனர். நமது மந்திரிகள் முன்னைய பிரிட்டிஷாரைப் போலவே யதேச்சாதிகாரமாக நடந்து கொள்கின்றனர் என்று குறை கூறியதுடன் சில தஸ்தாவேசுகளையும் ஆதாரமாகக் காட்டினார்கள். இது விஷயமாக நான் அந்தந்த மந்திரிகளைக்கண்டு பேசவில்லை. ஆனால் நாம் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினரை எந்தக் குற்றங்களுக்காகக் குறை கூறினோமோ, அதே குற்றங்கள் நமது மந்திரிகள் ஆட்சியில் நடைபெறலாகாது என்பதை மட்டும் அழுத்தமாகக் கூறுவேன். பிரிட்டிஷ் ஆட்சியில் ராஜப்பிரதிநிதி அவசரச்சட்டங்களை இயற்றி அமல் நடத்தினார். சட்ட நிரூபணமும் சட்ட நிர்வாகமும் ஒருவரிடத்திலேயே

இருத்தல் கூடாது என்ற கூக்குரல் கிளம்பியது. அந்த அபிப்பிராயம் மாறுபடக்கூடிய வகையில் பெரும் மாறுதல் ஒன்றும் நிகழ்ந்துவிடவில்லை. எனவே அவசரச்சட்ட ஆட்சி ஒழியவேண்டும். நமது சட்டசபைகளே சட்டங்களை இயற்றி வர வேண்டும். மந்திரிகளின் பதவி மக்கள் நினைத்தமாத்திரத்தில் மாறிவிடக்கூடியது. மந்திரிகளின் நடவடிக்கைகள் நியாயஸ்தலங்களின் அதிகார எல்லைக்குள் அடங்கியதாக இருக்க வேண்டும். தவக்கமில்லாமலும் லஞ்ச ஊழல்களில்லாமலும் பொதுமக்களுக்கு நியாயம் வழங்க, மந்திரிகள் தம்மால் இயன்றமட்டும் உழைக்க வேண்டும் இதைக்கருதியே பஞ்சாயத்து ஆட்சிமுறையைக் கைக்கொள்ளலாமென யோசனை கூறப்பட்டது; ஒரு ஹைகோர்ட்டின் நீதி, லக்ஷலக்ஷமான பொதுமக்களுக்கு எவ்வாறு எட்டக்கூடும்? “இது தான் சாதாரண நடைமுறை. அசாதாரணமான நிலைமை ஏற்பட்ட காலத்தில் அவசரச் சட்டமுறை தேவைப்படும். சட்ட நிருபண சபைகளின் நடவடிக்கைகளில் சிறிது தாமதம் ஏற்பட்டாலும், அதற்காக நிர்வாக அதிகாரிகள் கையிலேயே சட்டத்தை விட்டுவிடக் கூடாது. என்மனதில் குறிப்பிட்ட ஒரு திட்டமும் இப்போது இல்லை; பல மாகாணங்களிலிருந்தும் எனக்கு வந்துள்ள கடிதப்போக்குவரத்து ஒன்றே நான் இதுகாறும் கூறியவற்றிற்கு ஆதாரம். எனவே, மக்கள் சட்ட நிர்வாகத்தைத் தாங்களே கையாள முற்படுதல் கூடாதெனக் கேட்டுக்கொள்கிறேன். அதேபோல, மந்திரிகள் சுதந்தரத்துக்குமுன் நம்மால் கண்டிக்கப்பட்ட தவறுகளையே தாங்களும் செய்யாமல் நடந்து கொள்ளவேண்டும். மீண்டும் நான் கேட்டுக்கொள்வதென்னவென்றால், நீங்கள் உங்கள் அரசாங்கத்தினிடம் விசுவாசத்துடனும் நன்றியுடனும் நடந்து கொண்டு, அதற்கு வலுவைக் கொடுங்கள்; அதற்குப் பிரியப்படாவிடில், இந்தமந்திரிகளின் ஆட்சிவேண்டாம் என்று சொல்லிவிடுங்கள்; அப்படிச் செய்ய உங்கட்கு முழு உரிமையும் உண்டு” என்று ஆணித்தரமாகக் கூறினார் மகாத்மா.

பிரசங்கத்தை முடிக்கையில் மகாத்மா கூறியதாவது:— “ஜவாஹர்லால்ஜி உண்மையில் ஒரு ஜவாஹர்தான்—அதாவது ரத்தினம். ஹிந்து ராஜ்யம் வேண்டும் என்று கோரும் வாதத்துக்கு அவர் உடன்படவே மாட்டார். முஸ்லிம் நண்பர்கள் நலனுக்கு உழைக்கும் சர்தார் படேலும் அதற்கு இணங்கமாட்டார். நான் என்னைச் ‘சநாதன ஹிந்து’ என்று கூறிக்கொண்டாலும், நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து நாடு திரும்புகையில் என்னுடன் வந்த தென்னாப்பிரிக்க இமாம் சாஹேப் சபர்மதி ஆஸ்ரமத்திலேயே உயிர்துறந்தது நான் பெருமையடித்துக் கொள்ளத்தக்க நிகழ்ச்சியாகும். இமாம் சாஹேப்பின் மகளும் மருமகனும் இன்னும் சபர்மதியிலேயே இருக்கின்றனர். நானாவது சர்தாராவது அவர்களைத் தூக்கிக் கடலில் எறிந்துவிட முடியுமா? என்னுடைய ஹிந்து தர்மம் எல்லா மதங்களையும் கௌரவிக்க வேண்டும் என்றே கூறும். அந்தத்திசையில்தான் ராமராஜ்யத்தின் வெற்றி ரகசியம் இருக்கிறது. ஜவாஹர்லாலிடமும் சர்தாரிடமும் அவர்களுடைய கொள்கைகளையே கொண்டுள்ள மற்றவர்களிடமும் உங்களுக்கு மதிப்பும் நம்பிக்கையும் போய்விட்டதென்றால் அவர்களை யகற்றிவிட்டு உங்களுடைய மதிப்பையும் நம்பிக்கையையும் கொண்ட கோஷ்டியினரை அதிகாரத்தில் அமர்த்துங்கள் “என்று கூறிய மகாத்மா, கூட்டத்தினரை எச்சரிக்கும் முறையில்” எது எவ்வாறாயினும், சர்தாரையும் ஜவாஹர்லாலையும் அவர்களுடைய மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்குமாறும், இந்தியநாடு ஹிந்துக்களுக்குமட்டுமே உரியது என்று ஏற்றுக்கொள்ளுமாறும் செய்வது மட்டும் முடியாத காரியம். அந்தக் கொள்கையை வற்புறுத்தினால் நாடு நாசத்தையே அடையும்”என்று கூறிப் பிரசங்கத்தை முடித்தார்.





## 8—10—47

இன்றைய பிரார்த்தனைக் கூட்டத்தில் காந்திஜி பேசியதன் சாரமாவது:—

ஒரு அன்பர் என்னைப் பார்க்க வந்திருந்தார். அவர் டேராடூனில் வசிப்பவர். அவர் வந்த ரயிலில் ஹிந்துக்களும் சீக்கியர்களும் நிரம்பி யிருந்தனர்; எனவே ஒரு புதுமனிதனைக் கண்டதும் அவர்களுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. நீர் யார் என்று அவரைக் கேட்டதும், அவர் தன்னை ஒரு ‘சாமார்’ என்று கூறிக் கொண்டார்; ஆனால் அவர் தன் கையில் பச்சைகுத்திக் கொண்டிருந்ததைப்பார்த்ததும், அவர் ஒரு முஸல்மான்தான் என்றுதெரியவந்தது. அவ்வளவு தான் தாமதம்; அந்தப்புது மனிதனை ஒரே குத்தாகக் குத்தி யமுனை ஆற்றில் தூக்கியெறிந்து விட்டனராம். இந்தச் செயலைக் காணச் சகிக்காது, எதிர்ப்புறம் தான் திரும்பிக் கொண்டதாக எனது அன்பர் என்னிடம் கூறினார்.

அந்த அன்பரை நோக்கி, நீர் உமது உயிரையும் லட்சியம் செய்யாமல் அந்த சகோதர முஸல்மானுடைய உயிரைக் காக்க ஏன் முயற்சி செய்திருக்கக்கூடாது என்று குறுக்கிட்டேன். அப்படிச் செய்திருந்தால் முஸ்லிம் சகோதரன் கட்டாயம் இறந்திருப்பான்; அவரும் இறந்தே யிருப்பார் என்பது திண்ணம். ஆனால், அத்தகைய

செயலே வீரனின் அஹிம்சையாகும் என்பதைக் கூறவிரும்புகிறேன். அத்துடன் அந்த நிகழ்ச்சியிலிருந்து மற்றும் பலருக்கு அதே உணர்ச்சி கிளம்பி அவர்களும இம்மாதிரிக் கொடுமைகளைக்கண்டித்திருப்பர் என்று நான் கூறவே, அன்பர் தமக்கு அச்சமயம் அவ்வாறான எண்ணம் உதிக்கவில்லையே என்று வருத்தம் தெரிவித்தார்.

அந்த வண்டியிலிருந்தவர்கள் அனைவருமே கொடியவர்கள் என்று தாம் எண்ண மறுப்பதாகவும், அவ்வாறு ஒரு சமயம் இருந்திருப்பினும் தாம் கூறக்கூடிய புத்திமதி மேற்கூறப்பட்ட ஒரேவழிதான் என்றும் கூறிய மகாத்மா தொடர்ந்து கூறியதாவது: நாம் பிரிட்டிஷ் ஆட்சியுடன் நடத்திய போர், வீரர்களின் அஹிம்சையினால் அல்லவென்றும், அந்தக் குறைபாட்டினால் தாமும் நாடுமே இன்றும் அவதியுற நேரிடுகிறதென்றும் தம்மாலியலுமாகில், தமது எஞ்சிய வாழ்நாட்களையும் இந்த வீர அஹிம்சை தர்மத்தை எடுத்துப் போதிப்பதிலேயே செலவிடத் தாம் விரும்புவதாகவும், அந்த 'வீர அஹிம்சை' உண்மையில் மிகமிகக்கடினமான தர்மம் என்றும் கூறினார் மகாத்மா. மேலும் அவர் கூறியதாவது: "பாகிஸ்தானத்தில் நிகழ்ந்ததும் நிகழ்ந்துவருவதும் மிக மோசமானதுதான் என்பதை ஒப்புக்கொள்கிறேன்; ஆனால் இந்தியன் டொமினியனில் நிகழ்வதும் அதைப்போலவேதான் உள்ளது. இந்தமோசமான காரியத்தை எந்தத் தரப்பு முதன் முதலாக துவக்கியது என்றோ, எந்தத் தரப்பு அதிகமாக குற்றம் இழைத்திருக்கிறதென்றோ நிறுத்துப்பார்க்க வேண்டியதே யில்லை; அதனால் நற்பயன் ஒன்றுமே ஏற்படாது. இன்று இருதரப்பினரும் நேசமாக வாழவிரும்பினால்,இருவரும் பழைய நிகழ்ச்சிகளை அடியோடு மறந்துவிட வேண்டும். பேச்சிலும் காரியத்திலும் திருப்பித் தாக்குதல் என்ற எண்ணத்தை விட்டொழித்தால் நேற்று விரோதிகளாயிருந்தவர்கள் இன்று நேசர்களாக வாழ முடியும் என்பது திண்ணம்."





# தஞ்சை நாயக்கர்கள்.

கிருஷ்ணன்

குறுகிய, உணர்ச்சியன்னியில் இந்திய நாட்டுச் சரித்திரத்தை உற்றுநோக்கும் எவரும், ஆங்கிலேயர் ஆட்சி நிலைபெறும் வரை இந்நாட்டிலிருந்த அலங்கோலத்தை மறுக்க முடியாது. மொகலாயர்கள் ஆட்சி தோன்றியது 16–ம் நூற்றாண்டில். அக்பர், அவுரங்கசீப் இவர்கள் காலத்திலும் மொகலாய ஆட்சி தென்னாடு முழுவதையும்பாதிக்கவேயில்லை. இங்கிருந்த சோழர்களும் பாண்டியர்களும் பெயரளவில் மன்னர்களாயிருந்தனர். ஒருவரோடொருவர் சண்டையடித்துக்கொள்வதும், வலுவற்றவன் வெளிநாட்டானுடைய உதவியைக் கோருவதும், வந்தவன் இருந்தவனையும் அடிமையாக்கிக் கொண்டு தான் ஆட்சி செலுத்தத் தொடங்குவதும் சாமான்ய நிகழ்ச்சிகளாகவே இருந்தன.

15-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சோழவமிச அரசர்களில் கடைசியானவனாகிய வீரசேகரன், தன் நாடு க்ஷீண நிலையை அடைந்தபோது, அதை அபிவிருத்தி செய்ய இயலாதவனாய், மக்களின் கவனத்தை வேறு வழியில் திருப்பிவிட எண்ணி, பாண்டிய நாட்டு மதுரையில் ஆண்டுவந்த சந்திரசேகர பாண்டியனுடன் போர் தொடுத்தான். தோல்வியுற்ற பாண்டியன், அக்காலத்தில் பிரபலமாக விளங்கிய விஜயநகர சாம்ராஜ்யத்தின் சிறந்த மன்னனான கிருஷ்ணதேவராயனை (1509–1529) அணுகி அவருடைய உதவியைநாடினான். அவரும் அதற்கிணங்கி நாகம நாயக்கர் என்ற தளபதியின் கீழ் ஒரு பெரும் படையை அனுப்பினார். நாகமர் வீரசேகரனை முறியடித்து, அவனை மதுரையினின்றும் விரட்டிய பின், சோழநாட்டையும் கைப்பற்றிக்கொண்டார். சோழநாடும் விஜயநகர ஆதிக்கத்தின் கீழ் வந்தது. சேவப்ப நாயக்கர் என்பவர் விஜயநகர மன்னனின் பிரதிநிதியாகத் தஞ்சையிலிருந்து ஆட்சி செலுத்தலானார். மதுரையில் வேறொரு பிரதிநிதி இருந்து வந்தார்.

தஞ்சையில் ஆண்ட சேவப்பர் விஜய நகர மன்னனின் நெருங்கிய பந்து; பின்னர் மன்னனுடைய மைத்துனி மூர்த்தியம்பாளையும் மணந்துகொண்டார். உறவுமுறையைக் கருதி, மன்னர்கள் தஞ்சைப் பிரதிநிதியைக் கௌரவித்து வந்தனர். தஞ்சாவூர் ராஜ்யமே சேவப்பருக்குத் திருமணச் சீராக

வந்தது என்றும் சொல்லிக் கொள்ளப்பட்டது. இது நிகழ்ந்தது சுமார் 500 ஆண்டுகளுக்குமுன் என்பதை நினைவிற் கொள்ளுதவசியம். தஞ்சையைத் தலைநகராகக்கொண்ட குறுகிய சோழநாட்டைச் சேவப்பரும், அவர்குமாரர் அச்சுதப்பரும், பேரர் இரகுநாதரும், அவருடைய குமாரர் விஜயராகவருமாக, ஒருவர்பின் ஒருவராய் ஆண்டுவரலாயினார். மராட்டிய ராஜ்ய சத்திரபதியான சிவாஜி மன்னனின் சகோதரர் வெங்காஜி தஞ்சை மீது படையெடுத்து அதைக் கைப்பற்றும் வரை, 125 வருட காலம் தஞ்சையில் நாயக்கர்களது ஆட்சி நடைபெற்றது.

## சேவப்ப நாயக்கர்

தட்சிணத்து சுல்தான்களுடைய அமுலுக்கு எதிராக, இந்துதர்மத்தை நிலைநாட்டிப் பரிபாலிக்கத் தோன்றியதே விஜயநகர சாம்ராஜ்யம்; எனவே நாயக்கர்கள் தருமநெறி தவறாது தெய்வபக்தியுள்ளவர்களாக ஆண்டுவந்தனர். மக்கள் நலனுக்காகப் பாடுபட்டனர். சேவப்பர் அந்நிய மதங்களிடம் வெறுப்புக்கொண்டதில்லை. பல கோவில்கள் கட்டினார். குளங்கள் வெட்டுவித்தார். திருவண்ணாமலைக் கோயிலின் முன் கோபுரத்தை எடுப்பித்தவர் அவரே. தஞ்சாவூரில் சிவகெங்கை என்ற குளத்துக்கு ஜலம் வருவதற்காக ஒரு வாய்க்காலையும், சேவப்பன்வாரி யென்ற குளம் ஒன்றையும் வெட்டுவித்தார். தம் காலத்தில் மதுரையில் அரசு செலுத்திய விசுவநாத நாயக்கருக்கு 'வல்லம்' கோட்டையைக் கொடுத்துவிட்டு, அதற்கு மாற்றாகத் திருச்சிராப் பள்ளியை தாம் பெற்றார். அவருடைய ராஜ்யம் விஸ்தாரமாக இருந்தது.

## அச்சுதப்ப நாயக்கர்

சேவப்பர் தம் காலத்திலேயே தம் குமாரர் அச்சுதப்பருக்கு முடி சூட்டியபின் சிறிதுகாலத்துக்கெல்லாம் இறந்தார். அச்சுதப்பரும் விஸ்தாரமான நாட்டை ஆண்டார். அவரது ராஜ்யம் இராமேஸ்வரம்முதல் விருத்தாசலம் வரையிலும், கீழ்த்திசையில் கடற்கரையிலிருந்து திருச்சிராப்பள்ளி வரையிலும் பரவிக்கிடந்தது. அவருக்குச் சின்னச்சேவப்பர் என்ற பெயரும் உண்டு. அவர் சிறந்த விஷ்ணுபக்தர். ஸ்ரீரங்கம் கோயிலுக்கு மானியங்கள் பல அளித்தார். ஸ்ரீரெங்கநாதருக்குப் பதக்கமும் இரத்தின பீடமும் சலங்கை முதலிய ஆபரணங்களும் அணிவித்தார். அவற்றைச் செய்த பொற்கொல்லர்கட்கு, மானியங்கள் விட்டார். மாயவரம், திருவிடைமருதூர், விருத்தாசலம், திருவலஞ்சுழி, கும்பகோணம், திருவையாறு முதலிய ஊர்களில் மண்டபங்களும் படித்துறைகளும் கட்டுவித்தார். சிதம்பரம், திருப்பதி, காளத்தி முதலிய இடங்களிலுள்ள கோயில்களுக்கும் திருப்பணியாற்றினார். மூர்த்தியம்பாபுரத்தில் தன் மனைவி பெயரால் ஒரு கிராமமும் சத்திரமும் நிறுவினார். இன்றும் அங்கே ஒரு ஹைஸ்கூலும் இலவசச் சத்திரமும் உள்ளன. இவர் காலத்தில் பிராமணர்களுக்கு இடவசதி அளிக்கப்பட்டது.

வடமொழிப் புலமைக்கும் புத்தி கூர்மைக்கும் பெயர்பெற்ற கோவிந்ததீட்சிதர் அவருக்கு மந்திரியாகவிருந்தார். இவர் 'ஹரிவம்சசாரம்,' சங்கீத சுதாநிதி' என்ற கிரந்தங்களை இயற்றினார். திருவையாற்றுத் தலபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார். மகாபண்டிதர்களான இவருடைய இரு குமாரர்களும் அரசனது அவைக்கு அணியாக விளங்கினர்.

இவ்வளவு சிறப்புடனும் அமைதியுடனும் நடைபெற்ற ஆட்சியின்போது, கர்னாடக நவாப் பதவிக்கு இருவர் போட்டியிட்டனர். ஒருவர் அச்சுதப்பரின் உதவியைக் கோரினார். யுத்தம் நேரிடுமென்று எதிர்பார்த்த நாயக்கர் அதற்குச் சம்மதிக்கவில்லை; தம் குமாரர் இரகுநாதருக்கு முடி சூட்டிவிட்டுத் தமது கடைசி நாட்களை ஸ்ரீரெங்கநாதர் சந்நதியில் கழித்தார்.

## இரகுநாத நாயக்கர்

இந்த தர்ம சாஸ்திரப்படி முடிசூட்டப்பெற்ற தஞ்சை நாயக்க மன்னர்களில் கடைசியானவர் இவரே. மந்திரி கோவிந்த தீட்சிதரே முடியணிவித்தார். சிங்காதனம் ஏறிய காலை, ஜனங்களுக்குப் பல வரிகளைத் தள்ளுபடி செய்தான். தான தருமங்களும் பல நன்கொடைகளும் செய்தான். ஆனால் ஏற்கனவே எழுந்த கர்னாடகப் பதவிப்போட்டி முற்றிவிட்டதால், ஒரு கட்சியினருடன் பாண்டிய மன்னன் உறவுகொண்டு, தஞ்சைக்குரிய காவிரிக் கல்லணையைத் தகர்த்துவிட்டான். பெரும் போர் மூண்டது. இரகுநாதர் பாண்டியனை முறியடித்து அவன் மகளை மணஞ்செய்துகொண்டார்.

வீரரான இரகுநாதர் சிறந்த கல்விமானும் ஆவர்; 'தாமே ராமாயண சாரசங்கிரகம்; மகாபாரத சாரசங்கிரகம்; பாரிஜாத ஹரணம்; 'நளாப்யுதயம்; முதலிய அரிய நூல்களை இயற்றினார். அவரது அவையில் கோவிந்த தீட்சிதர், அன்னாரது இரு குமாரர்களையும் தவிர, வேறு பல பிரபல வித்வான்களும் இருந்தனர், சுமார் முப்பது வருஷகாலம் ஆண்டபின் இரகுநாதர் காலஞ் சென்றார்.

## விஜயராகவ நாயக்கர்

இரகுநாதருக்குப்பின் அவர் குமாரர் விஜயராகவர் சிங்காதானம் ஏறினார். ஆட்சியும் திறமையும் குன்றியது. ஏற்கெனவே மனக்கசப்பு கொண்டிருந்தமதுரை நாயக்கர்

மன்னரான சொக்கநாதர் தகுந்த சமயம்பார்த்துத் திருச்சிராப்பள்ளியைக்கைப்பற்றி அதைத் தமது தலைநகராக்கிக்கொண்டார். விஜயராகவரின் அழகிய புதல்வியை மணக்க விரும்பினார். வலுக்குன்றியிருந்த தஞ்சை மன்னர் தட்சிணத்து சுல்தான்கள் ஹிம்சை ஒருபுறமும் சொக்கநாதருடைய படையெடுப்புப் பயம் மறுபுறமுமாகத் தம்மை வாட்டவே, மனங்கலங்கலானார். ஆனால் சொக்கநாதருக்குத் தமது மகளை மணஞ்செய்துவிக்கச் சிறிதும் சம்மதமில்லாதிருந்தார்.

விஜயராகவர் நிகரற்ற வீரர்தான். பலமான கோட்டைகள் பலவற்றை அவர் கட்டுவித்தார். தஞ்சாவூர் அறந்தாங்கி, பட்டுக்கோட்டை, (புதுக்கோட்டையைச்சேர்ந்த) கீழாநிலை, (இராமநாதபுரம் ஜில்லா) திருப்பத்தூர் முதலிய இடங்களில் தாக்குதற்கரிய கோட்டைகளைக் கட்டுவித்தார். இருப்பினும் மதுரை நாயக்கர் தீவிரமாகத் தஞ்சையைத் தாக்க யத்தனம் செய்து கொண்டிருக்கையில் தஞ்சைமட்டும் ஏனோ உறக்கத்திலிருந்தது. திடீரென்று திருச்சிராப்பள்ளிப்படைகள் அளகிரி, வெங்கடகிருஷ்ணப்பன் என்ற இருவர் தலைமையில் தஞ்சையை நெருங்கிவிட்டன. அப்பொழுதும் தஞ்சை மன்னன் தமது பூஜையைவிட்டு அகலவில்லை. காலமும் தவறிவிட்டது. அவசர அவசரமாக ஆட்களைத் திரட்டி நடத்திய போரில் விஜயராகவரும் அவரது குமாரர் மன்னரும் மடிந்தனர். தஞ்சைக் கட்சி தோற்றது. அரசன் மனைவிமாரும் கூடவிருந்தவரும் தீப்புகுந்தனர். தஞ்சை மதுரை மன்னன் கைக்கு மாறியது. அளகிரி நாயக்கர் பிரதிநிதியாக இருந்து தஞ்சையில் ஆண்டான். அளகிரி நாயக்கர் சுயேச்சையாக நடந்துகொண்டபோதிலும் மன்னன் அவர் மேலிருந்த பிரியத்தினால் அதைக்கவனியாது இருந்தார்.

இதற்கிடையில் இறந்துபட்ட மன்னருடைய இளங்குழந்தை செங்கமல தாஸு, தாதியொருத்தியால் நாகபட்டினத்துக்கு எடுத்துச்செல்லப்பட்டு, அங்கு ஒரு செட்டியாரால் மறைத்து வளர்க்கபட்டு வந்தான். பன்னிரண்டு ஆண்டுகன் கழிந்தன. தஞ்சை அரண்மனையில் மன்னனின் 'ராயஸ' வேலை பார்த்துவந்த வெங்கண்ணா பழைய பரம்பரையில்வந்த செங்கமல தாஸுவை அரசுக் கட்டிலேற்ற முயன்றுவந்தார். தட்சிணத்து பீஜப்பூர் சுல்தானிடம் ரகசியமாகச் சென்று அவன் உதவியை நாடினார். அவன் அதற்கிணங்கி, சிவாஜி மன்னரின் சகோதரரான வெங்காஜியின் தலைமையில் ஒரு சேனையை அனுப்பினான். அளகிரி மதுரைமன்னரிடம் உதவிக்காக எவ்வளவோ மன்றாடியும் பயனில்லாது போயிற்று. மகாராட்டிய வீரன் வெங்காஜி அளகிரியை





வென்று செங்கமலதாஸைச் சிம்மாசனமேற்றினார். தஞ்சை நாயக்கர்களில் கடைசியானவர் இந்த இளைஞர் துரதிர்ஷ்டவசமாய், இவர் வெற்றி வீரரான வெங்காஜியை மதிக்கவில்லை. தன்னைவளர்த்த செட்டியாரையே தம்முடைய மந்திரியாக்கிக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதிருப்திகொண்ட வெங்கண்ணா சமயம்பார்த்திருந்து பீஜப்பூர் சுல்தான் இறந்த செய்தியைக்கேட்டதும் வெங்காஜியிடம் சென்று அவரைத்தூண்டிவிட்டுத்தஞ்சையைத் தாக்கிப் பிடித்துக் கொள்ளச் செய்தான். செங்கல தாஸு, தான் எளிதில்பெற்ற அரசை எளிதில் இழந்தான். வீரன் வெங்காஜி தஞ்சையில் மகாராஷ்டிர அரசை ஸ்தாபித்தான்.

125 ஆண்டுகளுக்குப் பின், தஞ்சையில் நாயக்கர்கள் ஆட்சி அற்றது. நாயக்கர்கள் ஆட்சியில் கிழக்குக் கடற்கரையோரத்தில் போர்த்துகீசியரும் டச்சுக்காரரும் குடியேறி வியாபாரம் நடத்திவரத் தொடங்கினர். ஐரோப்பிய நாட்டவரின் காலடி தென்னிந்திய மண்ணில் பட்டுவிட்டது.

சத்ரபதி சிவாஜி 1680-ல் இறந்தான். மகாராட்டிர சாம்ராஜ்யம் 1761-ல் மூன்றாம் பானிபட் யுத்தம்வரை உச்சநிலையிலிருந்தது. எனவே தஞ்சையும் ஆங்கில ஆட்சி தென்னிந்தியாவில் நிலைபெறும்வரை மராட்டிர மன்னர் ஆளுகையில் இருந்தது என்பதை மட்டும் குறிப்பிட்டுவிட்டு இக்கட்டுரையை முடிப்போம்.

---



# ஆசை மலர்

"தமிழ் அண்ணல்"

உறக்கம் இன்னும் கலையவில்லை. மறுபுறமாகத் திரும்பிப் படுத்தாள். கதிரவனின் இளங்கதிர்கள் சன்னல் வழியாக உள்ளே ஊடுருவிக்கொண்டிருந்தன. கண்களைச் சிறிது விழித்தவள் மறுபடியும் மூடிக்கொண்டாள். நேற்றைய நிகழ்ச்சிகள்! அப்பாடா அவை இன்னும் அவள் மனத்தைவிட்டு நீங்கவில்லை!

யாரோ அவர்கள், எதற்கோ வந்திருக்கிறார்கள்....!.... என்றுதான் அவள் முதலில் நினைத்துக்கொண்டிருந்தாள். ஆனால் அவன் பார்த்த பார்வை...... அப்பப்பா! இந்த ஆண்களின் கண்கள் இருக்கின்றனவே, "எதிரியின் நோவை அறியாத அம்புகள் அவை.... அவன்கூட அவன்தாயும் வந்திருந்தாள்." அவளும் ஏன் தன்னையே பார்த்துக்கொண்டும், தன்வேலைகளை எல்லாம் கவனித்துக்கொண்டும் இருக்கவேண்டும். வெகு நேரம் வரை இவர்களின் இத்தகைய செயல்களைக் கண்டு வத்ஸலாவுக்கு ஒன்றுமே புரியவில்லை.

இதை நினைத்துக்கொண்டிருந்தபோது வத்ஸலாவின் உதடுகளில் புன்னகை தவழ்ந்து மறைந்தது. இன்னும் அந்த நினைப்புக்கள் மறையவில்லை..... நேற்று..... ....

கடைசியாக வத்ஸலாவின் தாய் "அடி, இந்தப் புதுச்சேலையை எடுத்து உடுத்திக்கோடி..... உன்னைப் பார்க்கத்தானே அவங்க எல்லாம் வந்திருக்காங்க"......என்று சொன்னபோதுதான் அவளுக்கு நிலைமை புரிந்தது. துணுக்குற்றாள். அவள்முகம் திடீரென்று தரையை நோக்கிற்று, அர்த்தமில்லாமல்! தனக்குத் தெரியாமல் தன் பெற்றோர் பேசி முடிவுசெய்து 'அவர்களை' வரவழைத்திருக்கிறார்கள்! இதை நினைத்தபோது அவள் முகத்தில் மகிழ்ச்சிநிலவு மறைந்து, கோபமுகில் படர்ந்தது! எங்காவது ஓடிப்போய் தனியாக இருந்துகொண்டு அழலாமா என்றிருந்தது அவளுக்கு. ஆனால் என் செய்வது! அம்மாவின் கோபப்பார்வைக்கு முன்னும், கூக்குரலுக்கு முன்னும் அவளின் பிடிவாதம் எம்மாத்திரம். தனக்கு மனமில்லாவிட்டாலும் தாய்க்காக அவள் சொற்படி நடந்தாள். ஆனால் நல்லவேளையாக அன்றுமாலை வந்த ஜோதிடர் ஜாதகங்கள் இரண்டையும் புரட்டிப்பார்த்துவிட்டு "இதில்எனக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை, பொருத்தம் ஒன்றும்...........சரி.......என்று சொல்லமுடியாது........காரியாதிபதி சனி ஏழாமிடத்திலும்....."

என்று தொடங்கி அவர் கூறிய சொற்கள் இன்னும் அவள் காதில் ஒலித்துக்கொண்டிருந்தன. வண்டின் ரீங்காரத்திலே பொருள் இல்லாவிட்டாலும் இனிமை இருக்கிறதல்லவா! அதுபோல இருந்தது ஜோதிடரின் சொற்கள் வத்ஸலாவுக்கு!

காலைவெயிலின் சூடு தன்முழு பலத்துடன் அவள் பொன்னுடல்மேல் உராய்ந்தது. அவள் சோம்பல் முறித்துக்கொண்டு எழுந்தாள். எதிரே இருந்த கடிகாரம் 'டாண்' என்று அடித்தது. நிமிர்ந்து பார்த்தாள். மணி எட்டரை! மனப்பளு அதிகமாக இருக்கும் பொழுது விடிவதும், இருட்டுவதும் கூடத் தெரிவதில்லை அல்லவா.

தன்கடிகாரத்தைச் சரிசெய்து அணிந்துகொண்டே எதிரே இருந்த நிலைக்கண்ணாடி அருகே சென்றாள். ஒதுங்கியும், மாறியும் கிடந்த கூந்தலைச் சரிப்படுத்திக்கொண்டு பக்கத்தில் இருந்த செம்பைப் பார்த்தாள், முகத்தை அலம்பலாமென்று! ஆனால் அதில் தண்ணீரே இல்லை! அவள் அணிந்திருந்த மெல்லிய ஆடைகள் உடலுடன் ஒட்டித் துவண்டுபோயிருந்தன. நன்றாக உறங்கி எழுந்த அவள் முகத்தோற்றம் மலரஇருக்கும் மொட்டைப் போன்று இருந்தது. கண்ணாடியில் தோன்றும் தன்னிரு கண்களையே பார்த்துக்கொண்டிருந்தாள். அப்போது அவள் பின்னேவந்து கோபாலன்—நான் இதோ நிற்கிறேனே என் பக்கமாக அந்தக் கருவிழிகளைச் செலுத்துங்களேன்— என்று சொல்வதுபோல ஒரு நினைவு தட்டிற்று. சட்டென்று திரும்பிப் பார்த்தாள். ஒருவரும் இல்லை. அப்போது தெருவிலே ஏதோ சிறு ஒலி கேட்கவே சாளரத்தை நோக்கிச்சென்றாள்.

அங்கே நிறுத்தப்பட்ட கார் ஒன்று மறுபடியும் புறப்பட்டுக்கொண்டிருந்தது. எதிரே ஒருவன் பாரவண்டியை ஒதுக்கி ஓட்டிக்கொண்டிருந்தான். இடையே ஒரு ஆட்டுக்குட்டி தப்பி ஓடிக்கொண்டிருந்தது. சற்றுத் தவறினால் அதன்மீது கார் ஏறிஇருக்கவேண்டும். அதோடு வண்டியும், காரும் மோதிக்கொண்டிருக்கும். திடீரென்று கார் நிறுத்தப்பட்டதுதான் நல்லதாயிற்று என்று நினைத்தாள். இந்த ஆட்டுக்குட்டியை வளர்த்தவர்கள் யார்? அதன் தாய்........... ஒருவேளை மனிதர்களுடைய வயிற்றுக்குள் போயிருக்கும். ஆனால் வளர்த்தவர்களுக்கு ஆட்டுக்குட்டியைப் பற்றி என்ன கவலை. குட்டி அடிபட்டு இறந்தாலும், குழம்புக்குக்கூட ஆகாமலா போய்விடப்போகிறது.மனிதனுடைய மனநிலையும் சிலசமயங்களில் இந்த ஆட்டுக்குட்டியைப் போலத்தான் எதிலாவது அகப்பட்டுக்கொள்கிறது........ தப்ப முயல்கிறது..........அநேகமாகத் தப்பியும் விடுகிறது........ ஆனால் தப்பாவிட்டாலோ—

இவ்வாறு சிந்தித்துக்கொண்டு சாளரத்தில் சாய்ந்தபடியே நின்ற அவள் மறுபடியும் தெருவை நோக்கினாள். அங்கே கார், வண்டி ஒன்றும் அச்சமயம் இல்லை. ஆட்டுக்குட்டிமட்டும் அங்கும், இங்கும் அலைந்துகொண்டிருந்தது. தூரத்தில் இருவர் ஆணும், பெண்ணுமாக வந்துகொண்டிருந்தார்கள். இடையே கடையொன்றில் நுழைந்து "பூ" வாங்கிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் வெளியூர்க்காரர்களாக இருக்க வேண்டும் என்பதை, அவர்கள் கைகளிலிருந்த சாமான்கள் விளக்கிக்கொண்டிருந்தன.

அவன் பூ வாங்கி அவள் கையில் கொடுத்துவிட்டுக் கடைக்காரனுக்குக் காசு கொடுத்துக் கொண்டிருந்தான். அவள் அதைத் தன் தலையிலே சரியாக வைத்துக்கொண்டிருந்தாள். திரும்பிய அவன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். இருவர் முகத்திலும் புன்னகை தவழ்ந்தது. மீண்டும் நடக்கத் தொடங்கினார்கள். வத்ஸலா சட்டென்று தன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

ஃ ஃ ஃ

கோபாலனிடம் அவள் கொண்டிருந்த காதல்—அவள் உள்ளத்தே முளைத்த அந்த ஆசைத் துளிர் முன்பே செழித்து வளர்ந்து கொடியோடு இருந்தது. இந்தக்காட்சி அந்த ஆசைக்கொடியை ஒரே மணித்துளியில் அடர்ந்து, அடர்ந்து படர்ந்துவிடச் செய்தது, வானை நோக்கி! ஆகா.... இந்த ஆசைக்குத்தான் எவ்வளவு சக்தி........

உலகில் வானை நோக்கி வளர்ந்து, படர்ந்து, உயரும் கொடிகள் எத்தனையோ கொஞ்சகாலத்தில் இருந்த இடம் தெரியாமல் போய்விடுகின்றன. மனிதருடைய ஆசைக் கொடிகள் மட்டும் இதற்கு விதிவிலக்காய் இருக்கமுடியுமா! ஆனால் ஆசைப்படும் சமயத்தில் மனிதன் அதைப்பற்றிச் சிந்திப்பதே இல்லை. வத்ஸலாவும் தன் ஆசை அழியாத ஆசை என்றுதான் நினைத்துக்கொண்டாள்.

கோபாலனை முதன்முதலில் சந்தித்தபோது அவனுந்தான் வெட்கப்பட்டுக் கொண்டிருந்தான். இருவரும் ஒருவரை ஒருவர் நேருக்குநேர்கூடப் பார்த்துக்கொள்ளவில்லை. அவ்வளவு வெட்கம்.

ஆனால் வத்ஸலாவுக்கு அவனைப்பற்றி முன்னமே தெரியும். சிறந்த அறிவும், இனிய குணமும் உடையவன். சிறிது வெட்கமும் உண்டு. யாரிடமும் எளிதாக, சரளமாகப்பேசிவிட மாட்டான். நிதானம் அதிகம். ஆயினும் செல்வமில்லாத ஏழை வீட்டுப்பிள்ளை. இளமையிலே செல்வத்திலேதான் வளர்ந்தான் ஆயினும்....அவன் தந்தை தான் தேடியதையும், தன் முன்னோர் தேடியதையும் தவறான வழிகளில் செலவழித்துவிட்டு இறந்துபோய்விட்டார். தாயார்தான் தன் கையில் வைத்திருந்த கொஞ்சம் பொருளைக் கொண்டு தன் ஒரே மகனுடன் வாழ்க்கை நடத்திவருகின்றாள்.

ஆயினும் அந்த முதற்சந்திப்பு! அதை அவளால் மறக்கவே முடியாது. எங்கோ நூல்நிலையத்திலோ, போஸ்ட்டாபீஸிலோ சந்தித்ததாக நினைவு. அந்த முதற் சந்திப்பிலேயே கோபாலன் தன் திறமையைக் காட்டிவிட்டான். முதலில் "பேனா இருக்கிறதா" என்றான். அவள் எதிர்பார்க்காத கேள்வி அது. எனவே திகைப்புநீங்கி வெட்கத்தை விட்டு பேனாவை எடுத்துத் தலையை நிமிர்த்தி அதை அவன்கையில் கொடுப்பதற்குள் "சந்தேகமிருந்தால் வேண்டாம் நம்பிக்கை இருந்தால் கொடுங்கள்" என்றான். பேசாமல் பேனாவைக் கொடுத்தாள்! வேறொன்றும் அவளால் பேச முடியவில்லை அச்சமயத்தில், புன்னகை புரிவதைத்தவிர! இப்பொழுதுபோல இருந்தால், "உங்கள்மீது நம்பிக்கை வைக்க வேண்டும் என்று என்ன அவசியம் இருக்கிறது. ஊருக்குப் போய் நாளை வந்துவிடுவேன் என்று சொன்னவர் ஒருமாதத்திற்குமேல் தங்கிவிட்டீரே. இப்படி பொய்சொல்லும் ஒருவரை எப்படி நம்புவது" என்று கேட்டிருப்பாள். ஆனால் அவன் இன்னும் வரவில்லை.

இவ்வாறு நினைத்தவுடனே உண்மையிலேயே அவனைக் கேட்டுவிட்டதுபோலஇருந்தது அவளுக்கு. மறுகணம் அவன் மீது இரக்கமுண்டாயிற்று. அவன்தாய் அவனுக்காகத் தன் வீட்டிற்குவந்து தன்னைத்தரும்படி கேட்டதும், இங்கே அப்பா அம்மா அலட்சியமாகப் பதில் சொல்லி அந்தஅம்மாவை அனுப்பிவிட்டுஏளனமாகப்பேசியதும் அவள்நினைவிற்கு வந்தன. பணம்! பணம்!! இவர்களுக்குத்தான் எவ்வளவு பணத்தாசை, பணச்செருக்கு! என்று நினைத்துக்கொண்டே சாளரத்தை விட்டு நடந்தாள். அப்போது அம்மா .... தாயீ........ காலணாப் பிச்சைபோடுங்க .... கண்ணில்லாத கபோதிங்க........ அம்மா! என்ற ஏழையின் கூக்குரல் கீழிருந்துவந்து அவள் காதில் ஒலித்தது!

'என்ன உலகம் இது' என்று நினைத்துக்கொண்டே மாடிப் படிகளில் இறங்கினாள். சில படிகள்தான் இறங்கிஇருப்பாள். உள்ளே சாப்பிடும் இடத்திலிருந்து பேசுகின்றகுரல் அவள் காதில் கேட்டது. முதலில் அம்மா ஏதோ கூறினாள். அப்பாவின் குரலும் அதைத் தொடர்ந்துவந்தது. அப்பா காலைப்பலகாரம் சாப்பிடுகிறார் போலிருக்கிறது. ஆமாம் என்ன பேசுகிறார்கள் ........... உற்றுக்கேட்டாள்.

பணங்காசு இல்லாவிட்டாலும் நல்லா வாழ்ந்க குடும்பம் இல்லையா.... இது அம்மா குரல், 'பார்க்கலாம் பையனும் நல்ல

வனுத்தான் இருக்கிறுன்,' இது அப்பா. முதலிலே நம்ம பெண்ணுக்கு என்று சொல்லாமே ஜாதகத்தைவாங்கிகிட்டு வந்தா பிடிச்சிருந்தால் பிறகு பேசிக் கொள்ளலாம்.

சரி எல்லாத்துக்கும் ஜாதகத்தையும் வாங்கிக்கிட்டு ஜோசியரையும் கூட்டிக்கிட்டு சாயந்தரமா வாரேன்....

அன்றைக்கு அந்த அம்மாவா வந்து கேட்கிறபோது நீங்கஇப்படிப்பேசி இருக்கப்படாது. ....

நான் சொல்லுமுந்தி உன் முகந்தான் சொல்லியிருச்சே.... இதைச் சொல்லிக்கொண்டே அப்பா கைகழுவப் போய்விட்டார்.

சரி. போனதெல்லாம் போகட்டும். இன்றைக்கு.....இந்தச் சொற்கள் காதில் விழுமுன்பே அப்பா அடுத்த அறைக்குப் போய்விட்டார். அம்மாவும் பேச்சை நிறுத்திவிட்டாள்.

அம்மாவின் இந்தப்பேச்சு வத்ஸலாவின் மனத்தில் நீர் வார்த்தது. அப்பாவும் சம்மதித்து விட்டார். இதுவரை அப்பாவைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் அவளுக்கு நடுப்பகலின் வெயில்தான் நினைவுக்கு வரும். இப்பொழுதோ காலையில் வீசிய அந்த இளம்வெயில் அவள் நினைவுக்கு வந்தது. அப்பா இனி ஒருபோதும் கோடைக்கால வெயிலாக மாறக்கூடாதென்று அவள் மனத்துள் வேண்டிக்கொண்டாள். அவளது ஆசைக்கொடி செழித்துப் படர்ந்தது மட்டும் அல்ல, அதிலே ஒருமொட்டுக் கூடக் கருக்கட்டிவிட்டது! அவள் உள்ளத்திலே தளிர்த்த அந்த ஆசைக்கொடி அம்மாவின் அன்பு நீருக்கும், அப்பாவின் இளவெயிலுக்கும் தான் இத்தனைநாளாய் தவித்துக் கொண்டிருந்தது. நல்லவேளையாக அவர்கள் மனம் தன்பக்கம் திரும்பி விட்டது..........ஒருபடி இறங்கினுள். மீண்டும் ......... அந்த ஜோதிடர்.........

சற்றுமுன்வரை அவள்மனத்தில் மகிழ்ச்சிக்கு வித்தாக இருந்த அவர்.... இப்பொழுது அபாய அறிவிப்பாகத் தோன்றினுர். உலகத்தில் மக்களுக்கு ஒருகணம் பிடித்தமாயிருந்தது. மறுகணத்தில் மாறிவிடுகிறதே! அதன் பொருள் இப்பொழுது தான் அவளுக்குப் புரிந்தது. ஆனுல் ஜோசியர் மனமும் "சரி" என்று வாய்திறந்து விட்டால் ஆசைக் கொடியிலே கருக்கொண்ட அந்த மொட்டு, பெரிதாகி, மலர்ந்துவிடும்.... பிறகு மணம் ...மகிழ்ச்சி....

இதை எண்ணியபோது அவள் உள்ளம் துள்ளிக் குதித்தது மான்போல!

என்ன அக்கா,..மாடிப்படியிலேயே நிக்கிரையே...ஏன் அக்கா? என்று அவள் தங்கை கேட்டபோதுதான் வத்ஸலாவுக்குத் தன் நினைவு வந்தது.





வேகமாகப் படிகளில் இறங்கி வந்தாள்.

ஃ ஃ

மிக விரைவாகத் தன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டாள். என்றும் இல்லாத மகிழ்ச்சியுடன் வத்ஸலா உலவுவதைக் கண்ட தாயின் மனம் கூட மலர்ந்தது. அன்று வீட்டு வேலைகளெல்லாம் வேகமாக நிறைவேறின. மெதுவாக மாலைப்பொழுது வந்துகொண்டிருந்தது. அப்பாவை இன்னும் உணவுண்ணக்கூடக் காணவில்லை. ஒருவேளை இந்த வேலையாகத் தான் தங்கிவிட்டாரோ என்னவோ.... சாயங்காலமாகத் தானே வருவதாகச் சொன்னுர்.

எல்லோரும் சாப்பிட்டாகி விட்டது. சாப்பிட்டபின் சிறிது மயக்கமாக இருந்தது. நல்ல காற்று வாங்கலாமே என்று வத்ஸலா மாடிக்குச் சென்றுள். அங்கு சென்றதும் ரேடியோவைத் திருப்பினுள். ஒரு இனிமையான கீதம் கேட்டது. ஆனுல் வாத்திய இசையைத் தொடர்ந்து வந்த குரலிசை அவளை வருத்துவதாய் இருந்தது. "காதல் பொய்தானு, மெய்க் காதல் பொய்தானு" என்றதும் அதை நிறுத்திவிட்டு படுக்கையிலே சென்று சாய்ந்தாள் வத்ஸலா....... ஆசை மொட்டு மலரத் தொடங்கியது கனவிலே.......

உங்களை ஒன்று கேட்க வேண்டும்....

தாராளமாக ...

பதில்....

பதில் கிடைக்கும்.... கேட்டது கிடைக்குமா என்பது பிறகுதான் சொல்லவேண்டும்.

உங்கள் மனைவி எங்கே........ ஊரிலேயே விட்டு விட்டு வந்தீர்களா.......

அவன் சிறிது யோசித்தான். பிறகு சிரித்துகொண்டே "அவள் தன் பிறந்த வீட்டில் இருக்கிறுள்" என்றுன்.

அவள் தலையைக் குனிந்து கொண்டாள். வெட்கமோ.... கோபமோ!

நாம் இருவரும் தனியாகப் பேசிக்கொண்டிருப்பதை யாராவது பார்த்தால்.... அவன் மேற்கொண்டு சொல்லத் தயங்கினுன்.

இன்னும் இரண்டு மாதம் போனுல் யாரும், எதுவும் நினைக்கமாட்டார்கள்....

என்ன சொல்கிறுய்....?

ஓகோ....உங்களுக்கு ஒன்றும் தெரியாதோ. ஆமாம்...இப்பொழுதுதானே ஊரிலிருந்து வருகின்றீர்கள்! சரி ஓடுங்கள்! ஓடி உங்கள் தாயாரிடம் கேளுங்கள். அவர்கள் சொல்வார்கள்.... என்று சொல்லிச் சிரித்தாள். "சொல்லமாட்டாயா" என்பது போல அவன் அவளைப் பார்த்தான். அவள் பிடிவாதத்தை அறிந்த அவன் "ஏன் வீண் வம்பு" என்பதுபோல வேகமாக

நடந்தான் வீட்டை நோக்கி. "விழுந்துவிடாதீர்கள்" என்று சொல்லி அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு மாடி முழுவதும் எதிரொலித்தது. விழித்துக் கொண்டாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். யாரும் இல்லை. தன் கனவை எண்ணித் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டாள். அடடா! இந்த மனம்! அதிலே தோன்றும் ஆசைக் கொடி......அதற்குத்தான் எவ்வளவு வளர்ச்சி....வேகம்.... சுருக்கமாகச் சொன்னால் இந்த ஆசைக்குக்காலமும் கிடையாது. தூரமும் கிடையாது....வேறு எதுவுமே கிடையாது. ஆசைக்கு ஆசைதான் துணை, எல்லை.... ஆனால் தோன்றிய ஆசை ஒன்றுவது நிறைவேறிவிட்டால். ...

"அம்மா வத்ஸலா!" என்ற அம்மாவின் குரல் கீழே இருந்து வந்தது. வேகமாகக் கீழே இறங்கினாள். கடைசிப் படிக்கு வந்ததும்... திகைத்து நின்றாள். அப்பா, அம்மா, ஜோசியர், இன்னும் இருவர் முன் கூடத்தில் சமக்காளத்தின் மீது உட்கார்ந்திருந்தார்கள். தன் ஜாதகத்தைத்தான் ஜோசியர் பார்த்துக்கொண்டிருக்கிறார்போல் இருக்கிறது. என்ன சொல்லப்போகிறாரோ... தன்னிலை நினைவிற்கு வரவே உடையைச் சரிசெய்து கொண்டு ஒருபுறமாக ஒதுங்கி நின்றாள். அம்மா! எல்லாருக்கும் காப்பி போடம்மா என்று தாய் கட்டளை இட்டாள்.

வத்ஸலா உள்ளே சென்றாள்.... "வேண்டாம் எதற்கு, வீட்டுக்குப்போய்விடுவோமே" என்ற குரல்களும், அதற்கென்ன காப்பிமட்டுந்தானே, சாப்பிட்டு விட்டுப்போகலாம், என்ற தந்தையின் குரலும் அவள் காதிலே விழுந்தன.

சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் காப்பி தயாரித்துக் கொண்டு வந்தாள். எல்லோருக்கும் கொடுத்தாள். அப்போது அவர்கள் பேசிக்கொண்டிருந்த பேச்சினால் வத்ஸலாவின் உள்ளத்தில் மழைக்காலச் செழிப்பைக்கண்டு தோன்றும் மகிழ்ச்சி கூத்தாடியது! நாளைக்கேபேசி முடித்துவிட வேண்டுமாம். திருமணத்திற்குத் தேதிகூடக் குறிப்பிட்டுவிடப் போகிறார்களாம். இனி என்ன! அளவற்ற மகிழ்ச்சியோடு பாத்திரங்களை எடுத்துக்கொண்டு உள்ளே சென்ற வத்ஸலா அவற்றைக் கழுவுவதற்காக நேரே தோட்டத்திற்குப் போனாள். அங்கே நின்ற மல்லிகைச்செடி அவள் மனத்தைக் கவர்ந்தது. அதில் நிறைய மொட்டுகள் இருந்தன. மாலை வேளையின் செந்நிறம் ஒரு குழுமையைத் தந்துகொண்டிருந்தது. அந்நேரத்தில் தென்றல் உலாவரவே மல்லிகை மொட்டுக்கள் அதை வரவேற்று அசைந்தாடிக் கொண்டிருந்தன. சில மொட்டுகள் "இதோ மலரப்போகிறேன்" என்பது போல வாய்விட்டுச் சொல்லிக் கொண்டிருந்தன! அதைப் பார்த்த அவள் மனமும் மலரத் துடித்தது...ஆம்.... அவளின் ஆசையாகிய மொட்டும்...விடிந்தால் மலர்ந்துவிடும்.

மல்லிகைச் செடியின் அடியிலே பார்த்தாள். அங்கு தண்ணீரே இல்லை. வேகமாகச் சென்று தான் கழுவிய நீரனைத்தையும் கொண்டுவந்து அதன் அடியில் ஊற்றிவிட்டு நிமிர்ந்தாள். கொடி மீண்டும் அசைந்தாடியது. அம்மொட்டுக்கள்தான் அவளுக்கு நன்றி தெரிவித்து வணங்குகின்றனவோ....என்னவோ.

ஓர் முற்றிய மொட்டைக் கையாலே தொட்டுப்பார்த்தாள். தென்மலைப்பொதியத் தென்றலின் "சிலுசிலு"ப்புப் பட்டால் இம் மொட்டு இப்பொழுதே மலர்ந்துவிடும். ஆமாம், அம்மா, அப்பாவின் உதவியினால்தானே தன் ஆசை மலரப்போகிறது! அம்மா "வத்ஸலா" என்று கூப்பிட்டதைக்கேட்டுத் திரும்பினாள். "உன் மாமா வந்திருக்காரடீ... அங்கே என்ன செய்யறே.... சமைக்கவேண்டாமா" என்ற அம்மாவின் சொல்லைக்கேட்டு உள்ளே ஓடினாள். மாமாவை வரவேற்றாள். பிறகு சமைக்கத் தொடங்கினாள்.

அவருடைய சொந்த ஊர் அருகிலேதான் இருக்கிறது. நிலபுலன்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். பெண்கள்தான் அவருக்குப் பிறந்துள்ள மூன்று பிள்ளைகளும்! ஆண் குழந்தையே கிடையாது. சாதாரண வரும்படி. உண்டு. வத்ஸலாவின் தாய்மட்டும் பிறந்த வீட்டைப்பற்றி பெருமை அடித்துக்கொள்வாள் "என்ன இருந்தாலும்" நான் பிறந்த வீட்டில் பசிக்காமல் கஞ்சி குடிக்கலாம், என்று. தன் தமையன் சொல்வது எதையும் தட்டமாட்டாள்.

ஃ ஃ ஃ

எல்லோரும் கூடத்தில் பேசிக்கொண்டிருந்தார்கள். சமையல் முடிந்ததும் வத்ஸலா அவர்களை அழைத்துச் சோறு போட்டாள். அவர்களுக்குப் பரிமாறிக்கொண்டிருந்த வத்ஸலாவின் தோற்றம்—மாலைக் கதிரவனின் , செங்கதிர்களினூடே மகிழ்ந்தாடும் மல்லிகைக்கொடியை நினைப்பூட்டுவதாக இருந்தது. அவள் மாமாவுக்குக்கூடச் சிறிது வருத்தம். இவளுக்கேற்ற ஒரு மகன் தன் வீட்டில் பிறந்திருந்தால்....இந்த நினைப்பு வந்ததும்....வத்ஸலாவுக்கு....என்று தொடங்கினார். இடையே வத்ஸலாவின் தங்கை 'தண்ணி' என்றாள். இதுவரை அண்ணாவுடன் வத்ஸலாவின் தாய் தன் பிறந்த வீட்டு நிலவழக்கு சம்பந்தமாகப் பேசிக்கொண்டிருந்தாள். அந்தப்பேச்சிலேயே மூழ்கி விட்டதால் வத்ஸலாவின் திருமணத்தைப்பற்றி ஒருவரும் ஒன்றும் குறிப்பிடவில்லை.

அடடே மறந்துவிட்டோமே என்றெண்ணியவள், ஆமாண்ணு வத்ஸலாவுக்கு நாளைக்குக் கலியாணம் பேசுவதென்று நினைத்திருந்தோம். நல்லவேளையாக நீங்களும் வந்துவிட்டீர்கள்! என்றாள். "எங்கே" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் மாமா: அப்பா எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னார். மாமாவின் முகம் அதைப்பிரதிபலிக்கவில்லை. ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார். வத்ஸலாவின் உள்ளம் இதைக்கண்டு பதை பதைத்தது. மாலைக்கதிரவனின் தோற்றம் மறைந்து, இருள், உலகை நன்றாகக் கவ்விக் கொண்டுவிட்டது. வத்ஸலாவின் உள்ளமும் அதுபோல் ஆயிற்று!

பணமில்லாவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் இவர்களுக்குக்கடன் வேறு நிறைய இருக்கிறது. இந்தப் பையனின் தகப்பனார் சொந்த வீட்டையே எங்க ஊர் மிராசுதாருக்கு எழுதிவைத்திருந்தார். அவர் இறந்துவிடவே கடன் வருகிற வழியா இல்லை. இப்போ மிராசுதார் நேற்று "கேஸ்" தாக்கல் பண்ணிஇருக்கிறார். அவரை நேற்றுக் கோர்ட்டிலே கண்டேன் என்று மாமா சொல்லி முடித்துவிட்டு தன் தமக்கையை நோக்கினார். அது ஆபத்திலே காப்பாற்றியவனின் பார்வையைப்போல் பெருமிதத்தோடு இருந்தது. ஆனால்... வத்ஸலாவின் உள்ளம்.... ஆசை மொட்டு...

பனிபெய்யத்தொடங்கிவிட்டது. அதற்கெங்கே தெரியப்போகிறது. இந்த "ஆசை மொட்டு" காலையிலே மலர அதிக ஆவலுடன் இருக்கிறதென்று.

"எனக்கு அப்பவே தெரியும். சும்மா இவருதான் பையன் நல்லவன் நல்லவன்னு அடிச்சிக்கிட்டாரு" என்று அம்மா வேண்டா வெறுப்பாய்க் கூறினாள். பனியின் கொடுமை மிக மிகத், தென்றல்தான் பயந்து ஓடிவிடுகிறதே. குளிர் காற்று வீசத்தொடங்கியது.... புயலாகமாறுமோ......

"ஆமாம் இப்ப என்ன குடி முழுகிப்போய்விட்டது. ஜோதிடரிடம் சகுனம் சரியில்லை ஐயர் என்று கூறிவிட்டு வேறுஇடம் பார்த்தால் போகிறது" என்றார் அப்பா. 'வேறு இடம் தானே, எங்க ஊரிலேயே இருக்கிறதே. அந்த மிராசுதார் மகன் ஒருத்தன் இருக்கிறான். வயது இருபத்தைந்து இருக்கலாம்; உங்களுக்குப் பிடித்தமென்றால்... என்று மாமா இழுத்தார். பிடித்தமென்ன, நம்ம ஊரிலே தான் கொடுக்கவேண்டுமென்று துடியாய்த் துடித்தேன். மிராசுதார் வீடுதான் நம்ம அந்தஸ்துக்கு ஏற்ற இடம். நீங்கதான் கூட உதவியாக இருந்து அங்கே முடிச்சுப்பிடணும்" என்று தாய் முடித்தாள்.

புயல் அடித்துவிட்டது, திடீரென்று! கொடி இன்னும் ஆடுகிறது! முன்போல. தென்றலின் முன் அழகாக அல்ல! புயலின் முன் அலங்கோலமாக....





எல்லோரும் சாப்பிட்டுவிட்டுச் சென்று விட்டார்கள். வத்ஸலா சாப்பிடவே இல்லை. துன்பம் தொண்டையை அடைத்தது. பேசாமல் எல்லாவற்றையும் எடுத்து வைத்துவிட்டு மாடிக்குச் சென்றாள். மாடிப் படிகளில் ஏறிக்கொண்டிருக்கையில் "நாளைக்கே ஊருக்குப் போயி மாப்பிள்ளையைக்கூட்டிக் கொண்டு வாங்க, பெண்ணைப் பார்த்துப் பிடித்தம் என்றுகூறிவிட்டால் உடனே முடித்து விடலாம். இனி ஜாதகம் ஒன்றும் பார்க்கிறதாயில்லை" என்ற அம்மாவின் சொற்கள் காதில் விழுந்தன. அப்பாவும் வழக்கம்போல சரி என்றார். அவள் அதற்குப் பிறகு அங்கே நிற்கவில்லை. மாடிக்குச் சென்று படுக்கையிலே விழுந்தாள்.

அறியாமை இருள், பேராசைப்பனி, பணப்புயல் இவற்றினிடைய ஆசை மொட்டுக்கள் எங்கே மலரப்போகின்றன. வத்ஸலா கனவிலே கண்ட ஆசை மலர் இன்னும் மொட்டாகவே இருந்தது. அதுமட்டுமல்ல உதிர்ந்து கீழே கிடந்தது. வத்ஸலா புரண்டு, புரண்டு படுத்தாள்....இன்னும் உறங்கவில்லை....எப்பொழுது விடியும்? ஆமாம் இனி விடிந்தால் என்ன? விடியாவிட்டால்தான் என்ன? மலர இருந்த மொட்டுதான் உதிர்ந்துவிட்டதே!

ஆனால் கனவிலே கண்ட ஆசைமலர்....கனவிலே தான்! நனவிலே அது உதிர்ந்து கருகும் சருகு ஆகிறது. கனவிலோ ஆசைமலர்....! கற்பனைக்கும் வாழ்வுக்கும் இதுதான் வேறுபாடோ....வத்ஸலா மீண்டும் புரண்டு படுத்தாள்.

---



சந்திர நாகூர்

(முன் 8-ம்பக்கத் தொடர்ச்சி)

இன்று அதன் ஜனத்தொகை 52,000. வெளிநாட்டு வர்த்தகத் தொடர்பு அற்றுப்போயிற்று. அரசாங்க பாஷை பிரெஞ்சு. அப்பீல்கள் புதுச்சேரிக்கு அனுப்பப்படுகிறது. கைத்தொழில்களே இல்லை. சிறு ஊர் ஆலைதால் மக்கள் பெரும்பாலும் இந்திய யூனியன் பிரதேசத்தில் வேலை செய்யச் சென்று திரும்புகின்றனர். நகரின் பிரதம அதிகாரியும் போலீஸ் அதிகாரியும் பிரெஞ்சுக்காரர்களே. தவிர, தென்னிந்திய மக்கள் பலர் அங்கே சென்று உத்தியோகம் வகிக்கின்றனர். நகர நிர்வாகக் கவுன்சிலுக்கு 25 தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் உண்டு. 18 வயது நிரம்பியவர்களுக்கெல்லாம் வாக்குரிமை உண்டு. சமீபத்தில் பெண் மக்களுக்கும் அவ்வுரிமை அளிக்கப்பட்டுள்ளது. எனினும் மொத்த ஜனத்தொகையில் 25 சதவிகிதத்தினரே வாக்காளர் ஜாபிதாவில் இருக்கின்றனர். அவர்களுள் 60 சதவிகிதத்தினரே வாக்கெடுப்பில் கலந்து கொண்டனர். நகர ஆட்சியின் லட்சணம் இம்மட்டுத்தான் என்பது சொல்லாமலே விளங்கும் 1947 ஆகஸ்டில் ஆங்கிலேயர் வெளிக்கிளம்பி, இந்தியா சுதந்தரம் எய்தியதிலிருந்து இந்நகர மக்கள் இடைவிடாமல் கிளர்ச்சி செய்ததன் பயனாக, இந்நகர் 'சுதந்தரநகரமாகப் பிரகடனம் செய்யப்பட்டு, பொதுஜன வாக்கெடுப்புக்கும் ஏற்பாடாயிற்று. இந்திய யூனியன் கொடியை பிரெஞ்சுக் கொடிக்குப் பக்கத்திலேயே பறக்கவிட்டனர். இந்த இரத்தம் சிந்தாப் புரட்சியிலேற்பட்ட மாறுதல், இன்றைய பொது ஜனவாக்கெடுப்புமூலம் மக்களால் ஊர்ஜிதம் செய்யப்பட்டு விட்டது. சந்திரநாகூர் இந்திய யூனியனுடன் ஒன்றிற்று.

அதற்கென வேண்டிய புது ஏற்பாடுகளை இந்திய அரசாங்கம் இனிச்செய்யும். சந்திரநாகூரின் போக்கு, அயல் நாட்டினரின் இதா துணுக்குப் பிரதேசங்களிலுள்ள மக்களுக்கும் வழிகாட்டியாக விளங்கட்டும். ஐக்கியபத்திய நடவடிக்கைகளில் இரண்டாவது பிரச்னையும் சீக்கிரம் தீர்ந்து நாடு நலன் அடையும் என்று எதிர் பார்ப்போமாக.

இனி இருக்கும் பிரெஞ்சு பிரதேசங்கள் — பாண்டிச்சேரி, காரைக்கால், யானம், மாஹி இவையே. இவ்விடங்களில் பிரெஞ்சு ஆதிக்கத்தின் வலுவு மிக அதிகம். தன் சரித்திரத்திலேயே மிகவும் முக்கியமான பகுதியாக, அந்த இடங்களின் ஆட்சியை பிரான்சு கருதுகிறது. அவ்விடங்களை தனது சொந்த வியவகாரம் போலக் கண்காணித்து வருகிறது. அவைகள் இந்தவருஷ முடிவில் தமது அபிப்பிராயத்தை வாக்கெடுப்பில் வெளிக்காட்டும். இந்திய யூனியன் இதைச்சிரத்தையுடன் கவனித்து வருகிறது.

